

# அம்ருதா

AMRUDHA

வேள்வி 13 கலசம் 151
Volume 13 Issue 151

பிப்ரவரி 2019 ரூ.25
February 2019 Rs. 25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism

ரவிசுப்பிரமணியன்
பௌலோ கொய்லோ
டிசே தமிழன்
டி. கண்ணன்
ரவிக்குமார்
மாரம் அல் மாஸ்ரி
வைதீஸ்வரன்
உமா சக்தி
வண்ணநிலவன்
பொ. கருணாகரமூர்த்தி
அ. கதிரவன்
நூரி பெல்கெ சைலான்
ராம் முரளி
தேவதேவன்
ராஜ. முத்துக்குமார்
அ. ராமசாமி
கருணாகரன்
சுப்ரபாரதிமணியன்

# சுதந்திரமான பெண்!

# அட்சரா வெளியீடுகள்




## அட்சரா பதிப்பகம்

12 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 2ஆவது குறுக்குத் தெரு, சிஐடி நகர் , 3ஆவது பிரதான சாலை
நந்தனம், சென்னை - 600035. தொலைபேசி: 94440 7000,

வேள்வி 13 கலசம் 151

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

பிப்ரவரி-2019 விலை ரூ. 25





**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044 - 2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com



Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

* அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


## இந்த இதழில்...


06 கவிதை
**ரவிசுப்பிரமணியன்**

08 ஹிப்பி
**டிசே தமிழன்**

16 மாரம் அல் மாஸ்ரி
**ரவிக்குமார்**

20 கலவரமான கனவுகள்
**வைதீஸ்வரன்**

23 கவிதை
**உமா சக்தி**

24 பின்நகர்ந்த காலம்
**வண்ணநிலவன்**

28 சிறுகதை
**பொ. கருணாகரமூர்த்தி**

38 நேர்காணல்
**நூரி பெல்கெ சைலான்** தமிழில்: **ராம் முரளி**

44 கவிதை
**தேவதேவன்**

46 இயேசு கிறிஸ்துக்கு இறுதிச் சோதனை!
**ராஜ. முத்துக்குமார்**

52 சென்னைப் புத்தகக் காட்சி 2019 சில குறிப்புகள்
**அ. ராமசாமி**

59 கவிதை
**கருணாகரன்**

62 சிறுகதை
**சுப்ரபாரதிமணியன்**

# உங்கள் குப்பை எங்கள் செல்வம்!

பிளாஸ்டிக் பயன்பாட்டுக்கு விதிக்கப்பட்ட தடை வெற்றிகரமாக ஒரு மாதத்தை கடந்துள்ளது. அரசு உத்தரவுக்காகவே காத்திருந்தது போல் மக்கள் தடையை வரவேற்று கடைபிடித்து வருவது ஆச்சர்யமானது. கேரி பேக்குகள் தடையால் வணிகர்களுக்கு சிரமங்கள் உள்ளது. ஆனாலும், சுற்றுச்சூழல் நலன் நோக்கில் அவர்களும் வரவேற்று கடைபிடிக்கின்றனர் என்பது இன்னும் ஆச்சர்யமானது.

காணாமல் மறைந்து போயிருந்த துணிப் பைகள், ஒயர்கூடைகள் போன்றவை ஆங்காங்கே தென்பட ஆரம்பித்திருக்கின்றன. பார்சல் கட்டுவதற்கு வாழை இலை, தாமரை இலை, தேக்கம் மரத்து இலை போன்றவற்றை பயன்படுத்தவும் மக்கள் ஆரம்பித்துள்ளனர். உணவகங்கள், தேநீர் கடைகள், இறைச்சி கடைகளில் எல்லாம் மக்கள் பாத்திரங்களுடன் நிற்கும் காட்சிகளையும் பார்க்கமுடிகிறது. சில உணவகங்களில் உணவு வாங்க பாத்திரங்கள் கொண்டுவரும் மக்களுக்கு சிறப்பு சலுகையும் வழங்குகின்றனர். ஓலைப் பெட்டிகள், காகித கவர்கள், இலை கவர்கள், பாக்குபட்டை பொருட்கள் என்று எல்லா இடங்களிலும் இயற்கை சார்ந்த பொருட்களின் பயன்பாடு கணிசமாக அதிகரித்துள்ளது.

மக்களுக்கும் வணிகர்களுக்கும் இதில் இப்போது சிரமம் ஏற்பட்டாலும்கூட நீண்டகால நோக்கில் இது மிகப்பெரிய நன்மைகளை தரக்கூடியது. அதனை உணர்ந்து பல வணிகர்கள் துணிப்பைக்கு மாற ஆரம்பித்துள்ளனர். அதுபோல மக்களும் கடைகளுக்கு தன்னெழுச்சியாக துணிப்பைகளையும் பாத்திரங்களையும் கொண்டு செல்ல ஆரம்பித்துள்ளனர்.

இந்தியாவில் மட்டுமல்ல உலக முழுக்கவும் திடக்கழிவு மேலாண்மையில் பிளாஸ்டிக் கழிவுகளை அகற்றுவது மிகப்பெரிய சவாலாக உள்ளது. பிளாஸ்டிக் பொருட்களை எரிப்பது, புதைப்பது, கடலில் கொட்டுவது ஆகிய மூன்று வகையில்தான் இப்போது அகற்றுகின்றனர். வேறு ஆக்கப்பூர்வமான மறுசுழற்சியே இல்லாததால் அதனை முற்றிலும் தவிர்ப்பதுதான் நல்லது. இளநீர் குடிப்பதற்கு பப்பாளி தண்டினை ஸ்டிராவாக பயன்படுத்த சிலர் ஆரம்பித்துள்ளனர்.

இது எல்லாமே நல்ல மாற்றங்கள். ஆனால், இப்போது தடை செய்யப்பட்டுள்ளது தவிர, இன்னும் அதிகமாக புழக்கத்தில் இருக்கும், ரப்பர் பேண்டுகள் போன்ற சிறிய சிறிய பிளாஸ்டிக் பொருட்கள் அதிகம் உள்ளது. அதனையும் தவிர்க்கவேண்டும்.

பிளாஸ்டிக் பொருட்களின் தடைக்கு பெரிய அளவிலான வரவேற்பை கொடுத்து வருவது மாணவர்கள்தான். பள்ளிக் கல்லூரி மாணவர்கள் தங்கள் பைகள், உணவு டப்பாக்கள், குடிநீர் டப்பாக்கள் அனைத்திலும் பிளாஸ்டிக்கை தவிர்ப்பதுடன் அதற்காக தங்கள் வீடுகளிலும் விழிப்புணர்வுடன் பேசி வருகின்றனர்.

பிளாஸ்டிக் தடை என்பது வணிகர்களுக்கு ஒரு பேரிடிதான். பழங்கள், உணவுப்பொருட்கள் போன்ற பல பொருட்களை கேரிபைகள் இல்லாததால் விற்பனை செய்ய முடியாமல் தவிக்கின்றனர். இருந்தாலும் பிளாஸ்டிக் தடையை வரவேற்கும் வணிகர்களும் கணிசமாக உள்ளனர்.

வணிகர்கள் துணிப்பை பயன்படுத்த ஆர்வமாக இருப்பதாலும் இப்போது துணிப்பைகளுக்கு பெரிய அளவில் தேவை ஏற்பட்டுள்ளது. அதனால் மகளிர் சுய உதவிக் குழுக்கள், இளம் தொழில் முனைவர்கள் போன்றவர்கள் இந்த புதிய தொழில் வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்று சமூக செயற்பாட்டாளர்கள் கோரிக்கை வைக்கின்றனர். அதுபோல துணிப்பை, பாக்குமட்டை பொருட்கள்



போன்ற இயற்கையான பொருட்களை உற்பத்தி செய்பவர்களுக்கு அரசு உதவி செய்து ஊக்குவிக்க வேண்டும்.

இது தொடர்பாக அமெரிக்காவில் எடுக்கப்பட்ட ஒரு நடவடிக்கையை, எழுத்தாளர் ஸிந்துஜா நம் கவனத்துக்கு கொண்டு வந்தார். மத்திய அமெரிக்காவில் உள்ள ஒரு சிற்றூரில் நெகிழிப் பொருட்களால் ஊரே பெரும் அபாயத்துக்கு உள்ளாகி விட்ட நிலைமையில் , அங்கிருந்த ஒரே ஏரியும் யாரும் பக்கத்தில் நெருங்க முடியாத வண்ணம், சுற்றுப் புறச் சூழலைக் கெடுத்து நெகிழிப் பொருட்களால் அடைத்து கிடந்ததையும் கவனித்த சிற்றூர் அரசு கீழ்க்கண்ட வழிகளில் சீரமைப்பைத் தொடங்கியது.

- ஊரிலுள்ள மக்களின் பொருளாதார நிலைமை மோசமானது. மத்திய தர வர்க்கத்தின் மாதாந்திர வருமானமே சுமார் 9000 ரூபாய்தான். அதற்கு கீழ் நிலையில் இருப்பவர்கள் அனேகம். அப்படியானால் எவ்வளவு மோசமான பொருளாதார நிலையில் இருக்க வேண்டும்? இவர்களிடம் கையிலிருக்கும் பிளாஸ்டிக் பைகளை, பொருட்களைத் தூக்கி எறிந்து விட்டு துணி, காகிதம் ஆகியவற்றால் செய்யப்படும் பொருட்களை வாங்குங்கள் என்ற போது தங்கள் வசம் அப்படிச் செலவு செய்யப் பணமில்லை என்றார்கள். ஆகவே, அரசாங்கம் ஒவ்வொரு கிராமத்திலும், நகரத்திலும் உள்ள தலைவர்களை ஊர் மக்களின் வீட்டுக்குச் சென்று அவர்களுக்கு இந்த மாற்றம் ஏன் தேவை என்று விளக்கி அதன் பின் அவர்களிடம் உள்ள நெகிழிப் பைகளை, பொருட்களை பெற்றுக் கொண்டு பதிலுக்கு துணி, காகிதங்களால் ஆன பொருட்களைக் கொடுக்கச் செய்தனர்!
- மேல் குறிப்பிட்ட சிற்றூரில் அரசு இதற்காக தன்னிடமிருந்து சுமார் ஏழு லட்சம் ரூபாய் செலவழித்து புதிய மாற்றுப் பொருட்களை வாங்கிக் கொடுத்தது. இதை போல ஒவ்வொரு ஊரிலும் லோக்கல் அரசும் மக்களும் சேர்ந்து நெகிழிப் பொருள் ஒழிப்பை நிறைவேற்ற வேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டது. சட்டம் அமுலுக்கு வந்த பின் நெகிழிப் பொருட்களை உபயோகிக்கும் தனி நபருக்கு ரூபாய் முந்நூறும், அலுவலகங்களுக்கு ரூபாய் ஒரு லட்சமும் அபராதம் விதிக்கப்பட்டது.
- சேகரிக்கப்பட்ட கழிவுப் பொருட்களை இரு நிறுவனங்கள் எரிபொருளாய் மாற்றின. ஏரியில் அடைந்து கிடந்த கழிவுகளை மீனவர்கள் வெளியே எடுத்துத் தர அவற்றில் பெரும்பான்மையானவை அழகு சாதன பொருட்களாக மாற்றப்பட்டு விற்கப்பட்டன.
- எவ்வளவுக்கு எவ்வளவு நெகிழிப் பொருட்களை விலக்க முடியுமோ அதைச் செய்ய மக்கள் கூறப்படுகிறார்கள். ஜூஸ் குடிக்கும் போது எதற்கு ஸ்ட்ரா? பீர் குடிக்கும் போது ஸ்ட்ரா உபயோகிக்கிறீர்களா? நேரே வாயில் வைத்துக் குடித்தால் என்ன கெட்டு விடும்? போன்ற செய்திகளைப் பரப்புகிறார்கள்!
- இப்போது ஊரில் உள்ள ஏரி மிகச் சுத்தமாகப் பராமரிக்கப்பட்டு வருவதால் அது சுற்றுலாத் தலமாக ஆகிவிட்டது. 2018ல் ஈட்டிய அந்நிய செலாவணியில் நாற்பது சதவீதம் இந்த சுற்றுலாத் தலத்திலிருந்து அரசுக்குக் கிடைத்துள்ளது !

ஊரின் மேயர் மென்டிஸ் இதுதொடர்பாக கூர்மையாக கூறிய வாசகம்: “உங்கள் குப்பை எங்கள் செல்வம்.”

தமிழ்நாட்டிலும் இந்த மாதிரி வித்தியாசமாக சிந்தித்து செயல்படலாமே. ●

# ரவிசுப்பிரமணியன் கவிதைகள்

## 1. புலனாகாப் புதிர்கள்

துக்க ரேகைகளின் ஓட்டம் முடிவுற்ற
இக் குளிர் நாளில்
திவலையாய் திரளும் அனாந்திரப்பாடலைப்
பாடவேண்டும் உனக்காக
கேசயிழைகள் முகத்தில் படர
உளமேந்தி மருகிய உபாதை சொல்லி
நெஞ்சுருகக் கரைந்தழுது
கீழுதடு துடிக்க வேண்டி நின்ற மன்னிப்பில்
நா கசக்க பருகியதெல்லாம் மறந்தேன்
பாடவேண்டும் உனக்காக
காவிரிச்சுழிப்பு கொக்குகள் மேயும் வயல்வெளிகள்
கோபுரங்களின் நீண்டுயர்ந்த மோனங்களுடே
எல்லாச் சுமைகளையும் கையளித்துவிட்டு
பாடவேண்டும் உனக்காக
யவனம் முடியும் முன்
கருத்த நடு நிசியில் நேர்ந்த பிரிவின் வலி மறக்க
நம் பிராயத்து மரங்கள் இன்று
ஏன் இப்படிப் பூத்துச் சொரிகின்றன அமிர்தா எனக்கேட்டு
பாடவேண்டும் உனக்காக
திறந்த நடுவெளியில் பாலத்தின் இறக்க விசையில்
நிலைகொள்ளா வேகத்தில் செல்லும் இரு சக்கர வாகனனின்
பார்வைக்குப் புலப்படா காற்றாய் நின் இருப்பின் அடர்த்தி
அமிர்தத்தின் இந்த ஒருவாய் மிடறுக்கு
இத்தனை காத்திருப்பாவென
பாடவேண்டும் உனக்காக
தனிமை வனத்தில் பெய்யும் இந்த அடர் மழையை
உருக்கப் புனைந்து எண் திசையும் சிரிப்பதுபோல்
பாடவேண்டும் உனக்காக.



## 2. பேறு

உள்ளங்கையில் வழங்கப்பட்ட
துளசித்தீர்த்தாமய்
கண்ணில் ஒற்றி
வாயுறிஞ்சி



தலையொற்றிக்கொண்டேன்
உனதன்பை

உடன்
சடாரியால்
சிரம் தொட்ட ஆசீர்வாதம்.

## 3. கனம்

ஒப்பனையேற்றிய முகங்களுடன்
உள்ளங்கைகள் தட்டி கவனம் ஈர்த்துக் காசுகேட்கும்
திருநங்கைகள் இருவர் ஏறினர் தொடர் வண்டியில்
சிரசில் சூடிய பூச்சரங்களோடு
பெண்குரலின் விளிம்பிலும்
சன்ன மூக்கோசையோடும்
ஆண்குரலின் கனத்திலுமாக
ஊடாடிக்கேட்கும் அவர்கள் குரல்களால்
ஒருவித அசௌகரியம் பரவுகிறது
பயணிகளின் ஓர்மை கலைத்து
அருவருப்புகள், முகச்சுழிப்புகள்,
ஒதுங்கல்கள், தலைக்குனியல்களுக்கு மத்தியில்
சேகரமாகின்றன பணமும் நாணயங்களும்
சில மனிதாபிமானக் கருணைகளால்
விடலையொருவன் குறுக்கில் தன் கால் நீட்டி
தடுக்கிவிழ வைக்கப்பார்க்க
எம்பிக் குதித்து நகர்கிறார்கள்
நாசமாப்போறவனேயெனச் சாபமிட்டு
வைத்திருந்த பழப்பை பிஸ்கட்களை எல்லாம்
மனம் கசிந்த பெரியவர் தர
மறுத்து, பணம் வாங்கிக்கொள்கிறார்கள்
வடநாட்டுப்பெண் ஒருத்தி
பணம் தந்து ஆசீர்வதிக்கச்சொல்லி
குழந்தையை நீட்டுகையில்
கண்ணீர் தளும்புகிறது ஒரு திருநங்கைக்கு
அந்த நாளை இனிதாக்கிய குழந்தையின் தலைதொட்டு
ஆசீர்வதிக்கிறாள் உதடுகள் முணுமுணுக்க
தனித்துழலும் வலி மறந்து
தொடர்வண்டி
பெருமூச்செடுத்துக் கிளம்புகிறது மீண்டும்
டி. டீயுடன் வந்த காவலன்
ஏன் இதில ஏறினிங்கவென பிரம்பால் அடிக்க
ஓ என்று அலறுவோரை வாயிலடித்து விரட்டி
வாசல் பக்கத்துக் கழுவும் தொட்டியோரம் கீழே தள்ளி
வேகவேகமாய் மிதிக்கிறான் தன் பூட்சு காலால்
நாய்களா பணத்த எடுங்கடி
இல்ல ரிமாண்டுதானென மிரட்ட
பீதியும் பதைப்புமாய்
இரந்து பெற்ற சொற்ப பணத்தையும்
அவனுக்குத் தருகிறார்கள் நடுக்கமுற
தொடர்வண்டி நீண்டு வளைந்து குலுங்கிச் செல்ல
வாசலில் புகைபிடித்தபடி நிற்கிறான் விதிகளை மீறி
கடத்த முடியா துயரத்தைப் பார்த்தபடி
நானும் ஒருவனாய் திரும்புகிறேன்
கழிப்பறைக்குச் சென்றுவிட்டு. ●

**ரவிசுப்பிரமணியன்** <ravisubramaniyan@gmail.com>

பௌலோ கொய்லோவின்

# ஹிப்பி

**Hippie By Paulo Coelho, 2018**

1960களில் 'ஹிப்பி' இயக்கம் ஓர் அலையாக உலகெங்கும் எழுகின்றது. கீழைத்தேச நாடுகளின் தத்துவங்களையும் சன்னியாசிகளையும் தேடிப்போகின்ற ஒரு காலம் மேற்கத்தையவர்களுக்கு வாய்க்கின்றது. 60களின் பிற்பகுதியிலும் 70களின் தொடக்கத்திலும் ஹிப்பியாக அலைகின்ற ஒருவன், லத்தீன் அமெரிக்கா நாடொன்றிலிருந்து ஐரோப்பாவிற்கு தன்னைத் தொலைக்க வருகின்றான். தற்செயலாக அங்கே ஒரு பெண்ணைச் சந்திக்க, அவள் அவனுக்குள் நேபாளத்திற்குப் போகும் ஆசையைப் பெருகச் செய்கின்றாள். இறுதியில் ஐரோப்பிய அலைச்சலை ஒதுக்கிவைத்து அந்தப் பெண்ணோடு ஆம்ஸ்டடாமிலிருந்து நேபாளத்திற்கு ஹிப்பிகளால் அன்று 'Magic Bus' என அழைக்கப்படும் ஒரு பஸ்ஸில் புறப்படுகின்றான். நெதர்லாண்ட், ஜேர்மனி, ஆஸ்திரியா, துருக்கி, லெபனான், ஈரான், ஈராக், பாகிஸ்தான், இந்தியா என பல நாடுகளை, பல ஆயிரக்கணக்கான மைல்கள் தாண்டி, மூன்று வாரங்களுக்கு மேலாய் செய்யும் ஒருவகையான சாகசமான பயணம் என இதை அழைத்துக்கொள்ளலாம்.

பௌலோ தன் இருபதுகளின் தொடக்கத்தில் இருக்கின்றான். அதற்கு முன்னரே தன்னைவிடப் பத்து வயதான யூகோஸ்லாவாக்கிய காதலியோடு பெரு நாட்டின் மச்சுபிச்சுவிற்குப் போயிருக்கின்றான். மச்சுபிச்சுவிற்குப் போய், பொலிவாவைப் பார்த்து பிரேசிலுக்குள் நுழையும்போது, அன்றைய பிரேசிலிய வலதுசாரி அரசு / இராணுவத்தால் இருவரும் கைதுசெய்யப்பட்டு சித்திரவதை செய்யப்படுகின்றார்கள். பௌலோவின் காதலி இடதுசாரி சார்புள்ள யூகோஸ்லாவாக்கியாவைச் சேர்ந்தவள் என்பதால் இவர்கள் இருவரும் அந்நாட்டின் உளவாளிகளென சந்தேகத்தின் பேரில் சிறையில் அடைக்கப்படுகின்றார்கள். கடும் சித்திரவதையின் பின் இவர்கள் உளவு பார்க்க வந்தவர்கள் இல்லை என்பதால் விடுதலை செய்யப்பட்டாலும், பௌலோவிற்கு அதன்பிறகு பொலிஸ் / இராணுவத்தைக் கண்டாலே உளஅழுத்தமும் பதற்றமும் ஒவ்வொருமுறையும் வந்துவிடுகின்றது. இந்தச் சித்திரவதையின் பின், அவனது காதலியும் நடைமுறைச் சாத்தியங்களைக் காரணங்களைக் காட்டி விலத்திப் போகின்றாள்.



'ஹிப்பி' இயக்கத்தினுள்ளே தன்னைப் பொருந்திக்கொண்ட பௌலோ, 'ஹிப்பி' இயக்கம் பற்றிய நாம் அறியாப் பல உண்மைகளைச் சொல்கின்றார். ஒருவகையில் 'ஹிப்பி' இயக்கங்களை பெண்களே முன்நின்று நடத்திக் கொண்டிருந்தார்கள் என்பதை வெளிப்படையாகச் சொல்லவும் செய்கின்றார். ஆண்களாகிய தம்மால் எதையும் தனித்துச் செய்யமுடியாது எனச் சலிப்படைகின்றபோது பெண்களே தமக்கு அடைக்கலந் தந்து வழிப்படுத்தியிருக்கின்றார் என பௌலோ குறிப்பிடுகின்றார்: 'நாம் தனித்திருக்கின்றோம். எம்மை இந்த உலகமும் காதலும் கைவிட்டு விட்டதென கதறும்போது பெண்களே, ஆண்களாகிய நமக்கான திசைகளைக் காட்டியிருக்கின்றார்கள்'.

ஹிப்பி இயக்கம் அதனளவில் தந்த சுதந்திரத்தால், திருமணம் என்கின்ற அமைப்புக்குள் போகாது, தமக்கான ஆண்களைப் பெண்கள் தேர்ந்தெடுக்கின்றார்கள். காடுகளிலும் காமத்திலும் அதன் உச்சங்கள் வரை ஆண்களை எடுத்துச் சென்று வாழ்வின் புதிய பாதைகளை அவர்களே திறந்து காட்டுகின்றார்கள். அதேபோன்று தமக்கான முடிவுகளையும் தெளிவாக எடுத்து தொடர்ந்து - ஆண்களுக்காய் காத்திருக்காது - நகர்ந்து போகின்றவர்களாகவும் அந்தப் பெண்களே இருக்கின்றார்கள்.

ஹிப்பிகளின் உள்சுற்றுக்கென போய்க்கொண்டிருக்கும் Invisible Post அவர்களுக்கு ஒரு முக்கிய வழிகாட்டிப் புத்தகமாக இருக்கின்றது. 60களில் இந்தியாவில் சாமியார்களைத் தேடிப் போய்க் கொண்டிருந்த அலையை, பீட்டில்ஸிற்கு (Beatles) அணுக்கமாக இருந்த மகரிஷி மகேஷ் யோகி, ஜான் லெனனின் காதலியான மியா ஃபாரோவோடு குகைக்குள் முறைதவறி பாலியல் வன்முறை செய்யமுயன்ற நிகழ்வு, ஹிப்பிகளிடையே, முற்றுமுழுதாக மாற்றிப்போட்டு விடுகின்றது. ஹிப்பிப் பெண்கள் இந்தியாவை விலத்தி தமது புதிய தடங்களை நேபாளத்தின் காத்மாண்டு நோக்கி நகர்த்தத் தொடங்குகின்றனர்.

1970ஆம் ஆண்டு செப்ரெம்பர் மாதம் ஆம்ஸ்டடாமைச் சுற்றிப் பார்க்க வந்த பௌலோ, கார்லா என்கின்ற நெதர்லாண்டுப் பெண்ணைச் சந்திக்கின்றார். நல்லதொரு வேலையில் அந்நாட்டில் இருக்கின்ற கார்லாவின் உள்மனதை நேபாளத்தின் 'ஆன்மீகம்' எங்கோ தொலைவிலிருந்து




அழைக்கின்றது. தனது வேலையைத் துறந்துவிட்டு ஹிப்பியாக மாறுகின்ற கார்லாவிற்கு இதுவரை ஒருபோதும் சென்றிடாத நேபாளத்திற்குத் தனித்துச் செல்லத் தயக்கம் இருக்கின்றது. எனவே, இந்த 'மாய பேரூந்தில்' நேபாளம் போவதற்கு ஒரு நண்பரைத் தேடிக் கொண்டிருக்கின்றார். இலத்தீன் அமெரிக்காவிலிருந்து வந்த பௌலோவைச் சந்தித்தாலும் பௌலோவிற்கு கீழைத்தேய ஆன்மீகத்தேடலில் பெரிய ஈர்ப்பு இருக்கவில்லை என்பதையும் கார்லா அறிகின்றார். சில நாள்கள் கார்லாவோடு அலைகின்ற பௌலோ, சட்டென்று ஒரு முடிவை எடுத்து கார்லாவோடு நேபாளத்திற்கு பஸ்சில் போவதற்கு டிக்கெட்டை வாங்கிவிடுகின்றார்.

பௌலோவும் கார்லாவும் இந்தப் பஸ்சில் ஏறினாலும் அந்த பஸ்சில் வருகின்ற பல்வேறு நபர்கள் நமக்கு அறிமுகப்படுத்தப்படுகின்றார்கள். வீட்டை விட்டு ஓடிவரும் இரண்டு பதின்மப்பெண்கள், ஒரு தகப்பனும் மகளும் இன்னொரு காதல் சோடியென ஒவ்வொருத்தரும் தமக்கான கதைகளைக் கொண்டிருக்கின்றனர்.

தகப்பனும் மகளுமாக இந்தப் பயணத்தில் வருகின்ற பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்தவர்கள் பற்றி நிச்சயம் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும். பிரான்ஸில் 1968இல் மாணவர் புரட்சியில் ஈடுபட்டவர்களில் இந்தப் பெண்ணும் ஒருவர். அந்தப் புரட்சி தோற்றுப்போனதன் காரணத்தை அறியவும் தன்னையொரு இடதுசாரியாக முற்றாக ஆக்கவும் இந்திய - சீனா எல்லையிலிருக்கும் மாவோயிஸ்டுக்களைச் சந்திக்க இந்தப் பெண் விருப்புக் கொள்கின்றார். அதேவேளை அவரின் தகப்பனோ நாளாந்த வாழ்க்கையில் ஒரு சலிப்படைந்து, கீழைத்தேயத்திற்குப் புறப்பட தன் மகளைத் துணைக்கு அழைக்கின்றார்.

இவ்வாறு ஒரு பயணமும் மனிதர்களும் நமக்குச் சுவாரசியமாக அறிமுகப்படுத்தப் படுகின்றார்கள். பஸ் நிறுத்தப்படும் ஒவ்வொரு இடங்களிலும் அந்தச் சூழல் விரிவாக விவரிக்கப்படுகின்றது. ஹிப்பிகள் கட்டுப்பாடற்றவர்கள் என்பதை மறுத்து அவர்களைப் பற்றிப் பொதுப்புத்தி வைத்திருக்கும் பல தவறான எண்ணங்களை இந்தப் பயணத்தினூடு நமக்குச் சொல்லப்படுகின்றது. எப்போதும் ஹிப்பிகளுக்கு, பொது உலகோடு போய் இணையுங்கள், இதெல்லாம் ஒரு வாழ்க்கையா என்று சொல்லப்படுகின்ற 'அறிவுரைகளை' நமக்கு ஞாபகப்படுத்தப்படுகின்றது. வன்முறையையும் போரையும் வெறுத்து, மிகுந்த நெகிழ்வு கொண்ட, எவருக்கும் அதிகம் தீங்கு விளைவிக்காது தமது இயல்பில் வாழ்கின்ற பல அரிய மனிதர்களை நாம் இங்கே கண்டுகொள்கின்றோம். மிகப்பெரும் துறைகளில் இருந்து வாழ்வின் ஆடம்பரங்களை அனுபவித்த பலர் ஒரு நொடிப்பொழுதில் எல்லாவற்றையும் உதறித்தள்ளி, எந்த அடையாளங்களுமில்லாது தம்மை ஆக்கிக்கொண்டு அலைந்து திரிபவர்களாக மாறுவதையும் நாம் வியப்புடன் பார்த்துக்கொள்கின்றோம்.

பல்வேறு நாடுகளில் தங்கி நின்று, இரசித்து, பொதுப்புத்தியினதும் / பொலிஸினதும் வன்முறையும் சகித்து, இந்தப் பயணம் பல்வேறு நாடுகளினூடாகத் தொடர்கின்றது. பேருந்து துருக்கியை வந்தடைகின்றபோது ஜோர்டானில் மாறும் அரசியல் நிலவரம் சில வாரங்கள் இஸ்தான்புல்லில் தங்கவேண்டிய நிலையை இவர்களுக்கு உருவாகின்றது.

பயணத்திடையே பௌலோவிற்கு நல்லதொரு நண்பராக இருக்கும் கார்லாவில், இஸ்தான்புல்லின் சூழ்நிலை பௌலோவைக் காதலிக்கும் மனோநிலையை உருவாக்குகின்றது. ஒரு அழகான மாலைப்பொழுதில் அவர்கள் தமது உடல்களைப் பகிர்கின்றார்கள். பௌலோவிற்கும் கார்லாவின் மீது அளவிறந்த காதல் வருகின்றது. ஆனால், அவரது தேடல் இன்னொருவிதத்தில் அவரை அழைத்துச் செல்கின்றது. துருக்கியில், பௌலோவின் மனதில் சிறுவயதில் சித்திரமாக உருவாகித் தேங்கிப்போன சூஃபிகளின்பால் அது செல்கின்றது. தொடர்ச்சியாக சூஃபிகளைச் சந்திக்கப் போகத் தொடங்கிய அவரது ஆன்மீகப் பயணத்தில் (அவர் அங்கே சந்திக்கின்ற ஒரு பிரெஞ்சு சூஃபியின் கதை இன்னும் சுவாரசியமானது), அவர் ஒரு முடிவை தீர்க்கமாய் எடுக்க வேண்டியிருக்கின்றது.



தனக்குப் பிடித்த சூஃபியிஸத்தை அறிய துருக்கியில் நிற்பதா அல்லது கார்லாவின் காதலுக்காய் நேபாளம் வரை அவரோடு செல்வதா என்பது. பௌலோவின் வாழ்வின் ஆன்மீகத் தேடலின் முக்கிய புள்ளியாக வந்து இடைவெட்டுகின்றது.

காலம் நகர்கின்றது. இன்று பௌலோ ஒரு பிரபல்யம் வாய்ந்த எழுத்தாளராக ஆகிவிட்டார். அதன் பிறகு இடையில் ஆம்ஸ்டடாம் போய் தன் நூல் பற்றிப் பேசியபோதும் கார்லாவைச் சந்தித்துவிடக்கூடுமென நினைக்கின்றார். கார்லா என்றென்றைக்குமாய்க் காணாமறபோய் விடுகின்றார்.

இந்த நூல் இரஸவாதி (Alchemist) எழுதிய Paulo Coelhoவின் சுய அனுபவங்களின் தொகுப்பாகும். பௌலோவின் ஒரு சில நூல்களை நான் மேலோட்டமாக வாசித்திருந்தாலும் அவரை என் அலைவரிசைக்குரிய ஒரு எழுத்தாளராகக் கொண்டதோ, தொடர்ந்து அவரது நாவல்கள் அனைத்தையும் தேடி வாசிக்கவேண்டும் என்றோ நினைத்ததில்லை. அண்மையில் நூலகத்திற்குச் சென்றபோது 'ஹிப்பி' என்ற பெயரைப் பார்த்த ஒரு காரணத்தாலும் இந்தப் பயணம் எதைப் பற்றி என்று சிறு குறிப்பை வாசித்ததாலும் எடுத்துக்கொண்டு வந்து வாசித்து முடித்திருந்தேன்.

இது ஒரு சுவாரசியமான நூல் என்றாலும் 300 பக்கங்கள் உள்ள நூலின் அரைவாசிப் பகுதிவரையும் பயணம் ஆரம்பிக்கவேயில்லை. பயணத்திற்கான தயார்படுத்தல்கள், இன்னபிற விடயங்களே அதிகம் பேசப்படுகின்றன. பயணத்தின்போது பிற மனிதர்கள் அதிகம் பேசப்படுகின்றார்களே தவிர, பௌலோ பற்றியோ அல்லது கார்லா பற்றியோ அதிகம் அறிய முடிவதில்லை. ஆகக்குறைந்தது அவர்களின் ஆழ்மன ஆன்மீகத் தேடல்கள் பற்றியாவது விரிவாக இதில் பேசியிருக்கலாம்.

பௌலோ ஒரு தீவிரமான கத்தோலிக்க குடும்பத்திலிருந்து கொண்டுவரப்பட்டவர். பதின்மங்களில் அளவுக்கதிமான துடுக்காய் இருக்கின்றார் என்பதற்காகவே உளவியல் சிகிச்சை நிலையத்துக்கு அனுப்பப்பட்டவர்.




அங்கிருந்து தப்பியோடி, அவர் கண்டுபிடிக்கும் முதலாவது காதலியும் அவரைவிடப் பத்து வயது அதிகமாய் இருப்பதால் குடும்பத்தால் புறக்கணிக்கப்பட்டவர். பின்னர் பொலிவியா, சிலி, ஆஜெண்டீனா போன்ற நாடுகளுக்கு அவரின் காதலியோடு ஹிப்பியாக அலைந்துவிட்டு பிரேசிலுக்கு நுழையும்போது பொலிஸின் சித்திரவதையும் அனுபவித்தவர். பௌலோ ஸ்பெயினில் பல நூற்றுக்கணக்கன் மைல்கள் கிறிஸ்துவின்பால் கொண்ட அன்பினால் பாத யாத்திரை செய்தபோது தனக்குள் ஆன்மீகத் தெளிவு ஏற்பட்டதெனச் சொல்லியிருக்கின்றார். அதன்பின்னரே அவரால் Alchemist எழுதப்பட்டு உலகின் கவனத்தை ஈர்த்துக்கொண்டவர்.

ஒரு எழுத்தாளராக வரும் கனவு பௌலோவிற்கு இளவயதிலேயே வந்துவிடுகின்றது. அந்தக் கனவிற்கு இப்படி அவரின் 20களில் அலைந்து திரிந்த பயணம் இன்னும் ஊக்கத்தைக் கொடுத்திருக்கின்றது. பௌலோ அவரது Alchemistஐ எழுதும்போது நாற்பதைக் கடந்துவிட்டார் என்பதையும் கவனிக்கவேண்டும்.

அறுபதுகளிலும் எழுபதுகளிலும் பெரும் அலையாக எழுந்த 'ஹிப்பி' இயக்கத்தின் ஒரு குறுக்குவெட்டு முகத்தைப் பார்க்க பௌலோவின் 'ஹிப்பி'யை வாசித்துப் பார்க்கலாம். ஆனால், இது மட்டுமே ஹிப்பிகளின் முழுச் சித்திரத்தையும் தந்துவிடாது என்கின்ற அவதானத்தையும் இந்த நூலை வாசித்து முடித்தபின்னும் நினைவில் வைத்திருக்க வேண்டும். ●

**டிசே தமிழன்** <elanko@rogers.com>

# டி. கண்ணன் கவிதைகள்

1
பிரபாவின்* மதுகௌன்ஸில் சற்றே
சலனமடைந்து அமைதியில் ஆழ்கிறது அறை
செல்ல அணில்களும் கிளிகளும் இசை லயிக்கின்றன
இசை அமிழ பறந்து சென்றதும் காண்ஞ்
எங்கள் ஊர் காளிக்கு வயது 300
அந்த கண் கொண்டு
விராத் கொஹ்லியின் ஆட்டத்தைக் காண
எனக்கு நான் தடையாய் இருந்ததில்லை
** பிரபா ஆத்ரே*

2.
குழாய் தண்ணீரை திறந்து விட்டபடிக்கு
மலம் கழிக்கும் பழக்கம் என் அப்பாவிற்கு
சிகரெட் பிடித்தபடி மலம் கழிக்கும் நான்
அவர் இறந்த பின்தான் இதனை
ஒப்பீடு செய்ய முடிகிறது

3.
நீ காண சந்தோஷம்
என் கண்ணில் எனும் போது
தயக்கம் ஏன் ..
ஒரு சொப்பனத்தில்
இன்னொரு சொப்பனம்
கலப்பது போல்
இறுக அணைத்துக்கொள்வோம்
வா ...



4.
அந்த புத்தகத்தை படித்து முடித்த பின்
ஜீரணமான பகுதிகள் நனவிலும்
செரிக்கப்படாத பகுதிகள் கனவிலும்
விளையாடுகின்றன
அதில் ஒன்று ..
ஒரு குழந்தையிடமிருந்து அவன்
பொம்மையை பறித்துச் செல்கிறான்
குழந்தையின் அலறல்
(ரேவல் பொலேரோவின் ஊளை)
ஓடியவன் குறுக்கிட்ட நதியில்
தப்பிக்க குதிக்கிறான்
எதிர்கரை அடைந்து மேலேற
இவன் பொம்மையானான்
பொம்மை வேறொருவனாயிற்று
கரையில் காத்திருக்கிறது
போலீஸ் ●

**டி. கண்ணன்** <krishnaswamy164@gmail.com>

# அன்று

நான் பியூலாவைச் சிதம்பர நகரில் பார்ப்பேன் என்றே நினைத்ததில்லை. சங்கர மாமா வீட்டு அத்தைக்கு உடம்புக்கு முடியவில்லை என்று பார்க்கத்தான் தூத்துக்குடிக்கு வந்தேன், வந்து இரண்டு நாளாயிற்று. "என்னடே அவசரம்? வந்ததுதான் வந்தே.... கூட ரெண்டு நாள் இருந்துட்டுத்தான் போயேன்.." என்று மாமா வற்புறுத்தியதால்தான் இருந்தேன். இல்லையென்றால் பியூலாவைப் பார்த்திருக்க முடியுமா? மாமா வீட்டில் டி.வி.யைத் தவிர பொழுதுபோக்க வேறு எதுவுமில்லை. சாயந்திரம் மூணு மணிக்கு மேல் வெயில் தாழ வெளியே கிளம்புவேன். மனம் போன போக்கில் ஊரைச் சுற்றுவேன். அப்படி ஒருநாள் வெளியே கிளம்பிய போதுதான் பியூலாவைப் பார்த்தேன். ஒருநாள் என்ன ஒரு நாள்? நேற்று முன்தினம்தான்.

சிதம்பர நகரில் பூவரச மரங்கள் அதிகம். எல்லாத் தெருக்களிலும் வரிசையாகப் பூவரச மரங்கள் நின்றிருந்தன. அந்த மரங்களுக்குக்குக் கீழே நடப்பது பிடித்திருந்தது. அதற்காகவே, எந்த வேலையுமில்லாவிட்டாலும், சும்மா தெருவில் இறங்கி, மணல் நிறைந்த தெருக்களில், அந்த மரங்களினூடே நடந்து போவேன். அப்படி நேற்று முன் தினம் காலையில் போகும் போதுதான் எதிரே வந்த பியூல்லவைப் பார்த்தேன். ஒரு க்ஷணம், அது பியூலாதானா என்ற சந்தேகம் வந்தது. முப்பது, முப்பத்தி இரண்டு வருஷத்துக்கு முந்திய பியூலாவின் கை அசைவு, வட்டு வைத்துப் போட்ட கொண்டை எல்லாம் அப்படியே இருந்தன. என்னைப் பார்த்ததும் அவளுக்கும் என்னுடைய பழைய நடையும் தோற்றமும் ஞாபகத்துக்கு வந்திருக்க வேண்டும். ஆச்சரியத்தோடு தன்னுடைய நீண்ட கருத்த ஆள் காட்டி விரலை நீட்டி, "நீங்க." என்று அவள் தடுமாறிக் கொண்டிருந்தபோது, "நீ பியூலாதானே?" என்று கேட்டு நான் முந்திக்கொண்டேன்.



"எப்படி இருக்கீங்க?"

"நல்லா இருக்கேன்."

"எங்கே இந்தப் பக்கம்?.. இங்கேதான் இருக்கிறீங்களா?"

"நான் பாளையங்கோட்டையிலேதான் இருக்கேன். இங்க மாமா வீட்டுக்கு வந்தேன்."

அவள் ஆறாவது தெருவில்தான் இருந்தாள். வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனாள். எப்போதும் மல்லிகைப் பூவை கொண்டையைச் சுற்றிச் சுற்றியிருப்பாள். அவள் பக்கத்தில் எப்போதும் மல்லிகையின் வாசனை இருந்துகொண்டே இருக்கும். இப்போது அவள் பூ வைத்திருக்கவில்லை. பொட்டையும் நெற்றியில் காணோம். ஒரு வேளை தீவிரமான கிறிஸ்தவப் பெண்ணாகிவிட்டாளா?

அவள் தூத்துக்குடிக்கு வந்து எட்டு வருடங்களாகி விட்டன. மகன் திருச்செந்தூரில் வேலை பார்க்கிறான். துணிச்சலாக வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போகிறாளே? வேத சிரோண்மணி வீட்டில் இருக்கமாட்டாரோ என்று நினைத்தேன். வேத சிரோண்மணிக்கு எனக்கும் பியூலாவுக்கும் உள்ள உறவைப் பற்றி எதுவும் தெரியாது. ஆனாலும், பியூலாவுக்குப் பயம். அவளுக்கும் அவருக்கும் கல்யாணமெல்லாம் ஆகி பாளையங்கோட்டையில் இருந்தபோதுகூட என்னை அவள் வீட்டுக்கு அழைத்துச் சென்றதில்லை. நெல்லை லாட்ஜில் ரூமெல்லாம் போட்டுக்கூடத் தங்குவோம். ஆனால், வீட்டுக்கு மட்டும் அழைக்கமாட்டாள். இத்தனைக்கும் வேத சிரோண்மணி தினசரி நாகர்கோவிலுக்கு வேலைக்குப் போய் விடுவார். இரவுதான் வீடு திரும்புவார். என்னுடன் சினிமா, பொருட்காட்சி, லாட்ஜ் என்றெல்லாம் சுற்றுவாள். வீட்டுக்கு மட்டும் அழைக்கமாட்டாள்.

இத்தனை வருஷம் கழித்து அவள் உரிமையுடன் என்னை வீட்டுக்கு அழைத்தது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. பூட்டைத் திறக்கும்போது கேட்டே விட்டேன். "ஆச்சரியமா இருக்கே.. நீ என்னை வீட்டுக்கே கூட்டிட்டுப் போகமாட்டீயே. இன்னைக்கு அதிசயமா வீட்டுக்குக் கூப்பிட்டிருக்கே?"

"எல்லாம் சொல்லுதேன்.. உள்ள வாங்க" என்று, திறந்த ஒற்றைக் கதவை மூடுவதற்காக, அதைப் பிடித்துக்கொண்டே சொன்னாள். நான் உள்ளே போனதும், கதவை மூடித் தாளிட்டாள். "உக்காருங்க.." என்று சோபாவைக் காட்டி உட்காரச் சொன்னாள். ஃபேனைப் போட்டாள்.

"எல்லாமே ஆச்சரியமும் அதிசயமும்தான். இத்தனை வருஷத்துக்கப்புறம் பாப்போம்னு நெனைச்சிருக்கீங்களா?" என்று சேலை முந்தானையால் முகத்திற்குள் விசிறிக்கொண்டே கேட்டாள்.

"அப்படிப் பாத்தா இது அதிசயந்தான் பியூலா.." என்றேன். உட்கார்ந்திருந்தவாறே தலையைத்



திருப்பி சுற்றிப் பார்த்தேன். சோபாவின் பின்புறம் ஏதோ பெரிய புகைப்படம் சட்டமிடப்பட்டு மாட்டப்பட்டிருந்தது. நன்றாகத் தலையைத் திருப்பி அதைப் பார்க்கவில்லை.

"என்ன சாப்பிடுறீங்க?"

"இப்பம் ஒண்ணும் வேண்டாம்.."

"ஒண்ணும் வேண்டாம்னா எப்படி?"

"சரி, ஏதாவது குடு.."

காபியோ டீயோ போடுவதற்காக அவள் எழுந்தபோது, "வேத சிரோண்மணி ஆஃபீஸுக்குப் போயிருக்காரா?" என்று கேட்டேன். பியூலா சிரித்தாள். "ஆஃபீஸுக்கா? கல்லறைத் தோட்டத்துக்குப் போயாச்சு.." என்றாள்.

என்ன சொல்வதென்று தெரியவில்லை. "இறந்துட்டாங்களா?" என்றுதான் கேட்க முடிந்தது.

"ரெண்டு வருஷம் ஆச்சு. ஹார்ட் அட்டாக்ல போயிட்டாங்க." எதுவும் பேசத் தோன்றாமல், அவள் முகத்தையே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். நான் ஏதாவது பேசுவேன் என்று அவள் எதிர் பார்த்தாளோ என்னவோ? சிறிய மௌனத்துக்குப் பிறகு, "எத்தனை பிள்ளைகள்? பையன் வேலை பார்க்கிறான்னு சொன்னே.. அவனுக்குக் கல்யாணமாயிட்டுதா?"

"எத்தனை பிள்ளைகளா? ஒண்ணும் தெரியாத மாதிரிக் கேக்கறீங்களே?" என்று சிரித்தாள். எனக்கு அவள் என்ன சொல்ல வருகிறாள் என்று தெரியவில்லை.

"எபன் வயத்தில ரெண்டு மாசமா இருக்கும் போதுதான் அவங்களுக்கு ட்ரான்ஸ்பர் வந்து நான் கடலூர் போயிட்டேனே. அதுக்கு அப்புறம் நாம் ரெண்டு பேரும் எங்கே சேர்ந்து இருந்தோம். இத்தனை வருஷத்துக்கப்புறம் இப்போதானே உங்களைப் பார்க்கிறேன். அவளைத் தவிர வேற பிள்ளை எப்படிப் பொறக்கும்?"

"உனக்கும் உன் வீட்டுக்காரருக்கும் பொறந்தவன்தானே எபன்? வேற பிள்ளையே நீ பெத்துக்கலையா.."

"எபன் அவங்க பிள்ளை இல்ல.. அவங்களுக்குத்தான் கொழந்தை பொறக்காதுன்னுட்டாங்களே.."

:அப்போ எபன்?"

"ஆமா ஒங்களுக்கு எல்லாத்தையும் வெளக்கணும்.. அவனும் ஒங்களே மாதிரிதான் இருக்கான்.."

நான் பேசாமலிருந்தேன். "இருங்க.. டீ போட்டு எடுத்துட்டு வாரேன்?" என்று சொல்லிவிட்டு வீட்டினுள் சென்றாள். எனக்குப் பழசெல்லாம் ஞாபகத்துக்கு வந்தன. ஏதோவோரு குற்ற உணர்ச்சி என்னைப் பீடித்தது. அந்த ஹால் சிறியதாக இருந்தாலும், ஜன்னலுக்குத் திரைச்சீலைகள் எல்லாம் போடப்பட்டிருந்தன. தெருவில் ஏதோ வியாபாரம் போயிற்று ஃபேன் ஓடிக் கொண்டிருந்தாலும் வெப்பமாக இருப்பது போலிருந்தது. பரிமளா டம்ளர்களுடன் வந்தாள். டீ மணத்தது. டீயை ஆற்றிக் கொடுத்தாள்.

"என்ன அமைதியாகிட்டீங்க?"

ஏதோ சொப்பனத்திலிருந்து திடுக்கிட்டு விழித்தவனைப் போல், "ஒண்ணுமில்ல.. ஒண்ணுமில்ல.. பழசெல்லாம் நெனைச்சுக்கிட்டிருந்தேன். எபனுக்குக் கல்யாணமாகிட்டுதா?"

"அவனுக்கு ஆண் ஒண்ணு.. பொண் ஒண்ணு."

"நீ ஏன் அவன் கூடப் போயி இருக்கலை?"

"அவனுக்கு எதுக்குத் தொந்தரவுன்னுதான் போகலை. பக்கத்துலதான திருச்செந்தூரு.."

"நான் உனக்குக் கெடுதல் பண்ணிட்டேனா? என்னை மன்னிச்சிருவியா?"

"என்ன உளர்றீங்க? என்ன நடந்து போச்சு? கர்த்தர் என்னை ஆசீர்வாதமாத்தான் வச்சிருக்கார். அவங்களோட பென்ஷன் வருது. இந்த வீடு இருக்கு. சந்தோஷமாகத்தான் இருக்கேன்.."

"கல்யாணம் ஆனப்புறமும் உனக்குத் தொந்திரவு குடுத்திட்டேன்.."

"இல்லேன்னா எபன் கெடைச்சிருப்பானா? பேரன், பேத்தின்னு என்ன கொறைச்சல் எனக்கு?"

என்னைப் பற்றி விசாரித்தாள். என் மனைவியை அழைத்துக்கொண்டு அவசியம் வரவேண்டும் என்றாள். அவள் சகஜமாகத்தான் பேசினாள். ஆனால், என்னால் இயல்பாக இருக்க முடியவில்லை. ●

**வண்ணநிலவன்** <ramachandran.u49@gmail.com>

# மாரம் அல் மாஸ்ரி

சிரியா நாட்டில் லட்டாகியா என்னுமிடத்தில் பிறந்த மாரம் அல் மாஸ்ரி (Maram al-Massri) டமாஸ்கஸ் பல்கலைக்கழகத்தில் ஆங்கில இலக்கியம் பயின்றவர். 1970கள் முதல் அரபியில் கவிதைகளை எழுதி வருகிறார். அவரது தலைமுறையைச் சேர்ந்த முக்கியமான பெண்ணியவாதியாக அறியப்படும் அவரது கவிதைகள் பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அடோனிஸ் விருது உட்பட இலக்கியத்துக்கான மதிப்புமிக்க விருதுகள் பலவற்றைப் பெற்றிருக்கும் அவரது கவிதைகள் பல்வேறு மொழிகளில் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளன.

தன்னோடு எப்போதும் நொய்ந்து போன உறவுகளையும், பிரிவுகளையும், வலிமிகுந்த நினைவுகளையும் கொண்ட ஒரு பெட்டியை வைத்துக்கொண்டே இருப்பதாக அவர் குறிப்பிடுகிறார்." நான் எனது கடந்த காலத்தை , எனது நாட்டை, எனது மதத்தை, எனது மொழியை விட்டு விலகி விட்டேன். அதுதான் எனது நாட்டுக்கு நான் வழங்கும் தண்டனை. எனது நாட்டிலிருந்து மனதளவில் வெகு தூரம் விலகி வந்துவிட்டேன் என்று அவர் குறிப்பிடுகிறார்.

“நான் ஒரு சுதந்திரமான பெண். எனது நண்பர்களே அப்படித்தான் சொல்வார்கள். ஆனால் அப்போது எனக்கு அது புரியவில்லை. நான் நீச்சல் பழகினேன், நடனமாடக் கற்றுக்கொண்டேன், குட்டை பாவாடைகளை அணிவேன், சினிமாவுக்குப் போவேன். இங்கிலாந்துக்குப் போய்வருவேன். அங்கு வேறு ஒரு மதத்தைச் சேர்ந்த பையனைக் காதலித்தேன். அதெல்லாம் ஒழுக்கம் கெட்ட விஷயங்களாக எனது நாட்டில் கருதப்பட்டன.

நான் எப்போதும் மண்ணோடு எந்த உறவையும் வைத்துக்கொள்வது இல்லை எனது உறவெல்லாம் மனிதர்கள்தான். மனிதர்கள்தான் ஒரு இடத்தை நாடாக மாற்றுகிறார்கள். எங்கு நீங்கள் மதிக்கப்படுகிறீர்களோ, எங்கு நீங்கள் நேசிக்கப்படுகிறீர்களோ அதுதான் உங்கள் நாடு. நான் பாரிஸை விரும்புகிறேன் அங்குதான் எனது குழந்தைகள் இருக்கிறார்கள், நான் விரும்பும் மனிதர்கள் இருக்கிறார்கள். நான் கிரனடாவில் வாழலாம், ரோமில் வாழலாம் அங்கெல்லாம் நான் நேசிக்கும் மனிதர்கள் இருக்கிறார்கள். ஆனால் மீண்டும் சிரியாவுக்குச் செல்ல முடியும், அங்கே வாழ முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை” என்கிறார் மாரம்.



அவரது நிலைபாட்டைப் புரிந்துகொள்ள சிரியாவின் வரலாற்றை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். 20ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஃப்ரான்ஸ் நாட்டால் காலனியாக்கப்பட்ட சிரியா இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு தொடர்ச்சியான விடுதலைப் போராட்டத்தை நடத்தி 1946ஆம் ஆண்டுதான் சுதந்திரம் அடைந்தது. சுமார் 25 ஆண்டுகள் அந்நாட்டை அடிமைப்படுத்தி வைத்திருந்த ஃப்ரான்ஸ் அந்நாட்டின் பண்பாட்டின்மீது மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியிருந்தது.

“நான் இரண்டு விதமான பண்பாடுகளின் கலவை சிரியாவில் இருந்தபோது பாப் டைலனையும் பீட்டில்ஸ் இசையையும் விரும்பிய எனது சகோதரர்களின் மூலமாக மேற்கத்திய பண்பாடு எனக்குள் வந்திருந்தது. எனது அம்மா ஒரு கலைஞர்; அப்பா, மதச்சார்பற்ற லெபனானியர். நான் ஒரு மேற்கத்திய நாட்டவள் அல்ல, பணிவும் எதிர்ப்பும் கலந்த ஒரு பெண். சுதந்திரம் என்பது இரவில் வெளியே போவது மட்டுமல்ல, பல்கலைக்கழகத்தில் சென்று படிப்பது சுதந்திரம், கார் ஓட்டுவது சுதந்திரம். பாலியல் சுதந்திரம் குறித்து எந்தவித ஒழுக்கவியல் சார்ந்த நிலைப்பாடும் எனக்கு இல்லை. மற்றவர்களுக்குத் தொந்தரவில்லாத எதுவும் அனுமதிக்கப்படவேண்டும் என்பதே எனது நிலைப்பாடு” என மாரம் அல் மாஸ்ரி சொல்வதன் பின்னே ஃப்ரான்ஸ் விட்டுச் சென்ற பண்பாட்டுத் தாக்கத்தை நாம் கவனிக்கலாம்.

1970 ஆம் ஆண்டு ஒரு ராணுவ கலகத்தின்மூலம் ஆட்சியைக் கைப்பற்றிய ஹஃபீஸ் அல் அஸாத் அந்த நாட்டை ஒரு மதச்சார்பற்ற நாடு என்றே அறிவித்திருந்தார். ஆனால் அந்நாட்டின் முதன்மையான மதமாக இஸ்லாம் அங்கீகரிக்கப்பட்டது. அவர் 2000 ல் இறந்தபின்னர் அங்கே உள்நாட்டுக் குழப்பங்கள் தலைதூக்க ஆரம்பித்தன. 2002 க்குப் பிறகு சிரியாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையிலான மோதல் வலுவடைந்தது. சிரியாவிடம் பேரழிவு ஆயுதங்கள் இருப்பதாகக் குற்றம் சாட்டிய அமெரிக்கா அங்கு செயல்பட்டுவந்த அடிப்படைவாதக் குழுக்களுக்கு ஆயுதங்களை ரகசியமாக வழங்கத் தொடங்கியது.

2011 ஆம் ஆண்டு ஏற்பட்ட அரபு வசந்தம் என்னும் சுதந்திரப் போராட்டத்தால் உந்தப்பட்ட சிரிய மக்கள் தமது உரிமைகளுக்காகத் தெருக்களில்



இறங்கிப் போராட ஆரம்பித்தனர். அவர்களது போராட்டங்களை ராணுவத்தைக்கொண்டு சிரிய அரசு ஒடுக்கியது. ஒருபுறம் சுதந்திரத்துக்கான மக்களின் போராட்டங்கள் இன்னொருபுறம் ஆயுதம் தாங்கிய அடிப்படைவாதக் குழுக்களின் தாக்குதல்கள் என சிரியா 2011 ஆம் ஆண்டுமுதல் மிகப்பெரிய உள்நாட்டு யுத்தத்தைச் சந்தித்து வருகிறது.

மத்திய கிழக்கு நாடுகளில் தற்போது ஏற்பட்டுள்ள உள்நாட்டு யுத்தங்களுக்கும், அங்கே வளர்ந்து வந்துள்ள அடிப்படைவாதத்துக்கும் பின்னணியில் இஸ்ரேலின் தாக்குதல்களும், அமெரிக்காவின் தலையீடும் இருக்கின்றன.

இப்படி ஏகாதிபத்திய நாடுகளின் ஆதிக்கப் போட்டியால், உள்நாட்டு யுத்தத்தால் தினசரி வாழ்வு என்பதே ஜீவ மரணப் போராட்டமாகிவிட்ட ஒரு நாட்டிலிருந்து தப்பித்து இன்னொரு நாட்டில் தஞ்சம் புகுந்த ஒருவரது மனநிலை எப்படியிருக்கும் என்பதன் சாட்சியங்களாக இருக்கின்றன மாரம் அல் மாஸ்ரியின் கவிதைகள். அவரது கவிதைகளில் சிலவற்றை இங்கே தமிழாக்கம் செய்து தருகிறேன். (இந்தக் கவிதைகளை அரபியிலிருந்து ஆங்கிலத்துக்கு மொழிபெயர்த்தவர் காலித் மட்டாவா (Khaled Mattawa ).

**ரவிக்குமார்** adheedhan@gmail.com

# மாரம் அல் மாஸ்ரி கவிதைகள்



1.

என்னவொரு முட்டாள்தனம்:

தட்டும் ஓசையை எப்போது கேட்டாலும்

என் இதயம் தன் கதவுகளைத் திறந்துவிடுகிறது

2.

பொசுக்குகிறது வேட்கை

மங்குகின்றன கண்கள்

அருகிலிருக்கும் இழுப்பறையில் ஒழுக்கவிதிகளைத் திணித்துவிட்டு

நான் ஒரு ராட்சசியாகிறேன்

தேவதைகளின் கண்களைக் கட்டுகிறேன்

ஒரு முத்தத்துக்காக

3.

நான் காத்திருக்கிறேன்
எதற்காகக் காத்திருக்கிறேன்?
மலர்களையும்
இனிமையான சொற்களையும் கொண்டுவரும்
ஒருத்தனுக்காக
என்னைப் பார்க்கிற
என்னுடன் பேசும்போது நான் சொல்வதைக் கவனிக்கிற
ஒருத்தனுக்காக
எனக்காக அழும் ஒருத்தனுக்காக
அவன்மீது பரிதாபப்படுகிறேன்
அவனை நேசிக்கிறேன்

4

என்னைப்போன்ற பெண்களுக்கு
எப்படிப் பேசுவதென்று தெரியாது
வார்த்தை அவர்களின் தொண்டைக்குள் முள்ளாக நிற்கும்
அதை அவர்கள் விழுங்கிவிடுவார்கள்

என்னைப்போன்ற பெண்களுக்கு
ஒன்றும் தெரியாது அழுவதைத்தவிர
சாத்தியமற்ற அழுகை
சட்டென்று
அறுபட்ட நாளம் ஒன்றிலிருந்து பீறிடும் ரத்தத்தைப்போல

என்னைப்போன்ற பெண்கள் அடிவாங்குகிறார்கள்
திருப்பிக்கொடுக்கத் துணிவிருப்பதில்லை
கூண்டில் அடைபட்ட சிங்கங்களைப்போல
ஆத்திரத்தில் நடுங்குகிறார்கள்
அடக்கிக்கொள்கிறார்கள்

என்னைப் போன்ற பெண்கள்
கனவுகாண்கிறார்கள்
சுதந்திரத்தைப்பற்றி .....



5.

அவன் விரும்பியது ஒன்றுமில்லை
ஒரு வீடு
குழந்தைகள்
தன்மீது அன்புகொண்ட ஒரு மனைவி
ஆனால் ஒருநாள் அவன் கண்விழித்தான்
தனது ஆன்மா கிழடாகிவிட்டதைக் கண்டான்

அவள் விரும்பியது ஒன்றுமில்லை:
ஒரு வீடு
குழந்தைகள்
தன்னை நேசிக்கும் ஒரு கணவன்
ஆனால் ஒருநாள் அவள் கண்விழித்தாள்
தனது ஆன்மா ஜன்னல் ஒன்றைத் திறந்து
தப்பித்துவிட்டதைக் கண்டாள்

6.

அன்று இரவோ அல்லது இன்னொரு நாளிலோ
சரியாக நினைவில்லை
நான் என் தந்தையைக் கொலைசெய்தேன்
கனவுகளாலும் மறதிகளாலும்
குழந்தையாக இருந்தபோது
தனது கைகளில் என்னைத் தூக்கிவைத்துக்கொண்டு
அப்பா நிற்கும் புகைப்படம் ஒன்றாலும் நிரப்பப்பட்ட
பெட்டியோடு நான் தப்பித்தேன்

என் அப்பாவை அழகானதொரு கிளிஞ்சலில் வைத்து
ஆழ்கடலில் புதைத்தேன்
ஆனால்
அவர் கண்டுபிடித்துவிட்டார்
பயத்தில் தனிமையில்
நடுங்கியபடி கட்டிலுக்குக் கீழே
ஒளிந்திருந்த என்னை ●

வைதீஸ்வரன் ஓவியம்: Jackson Pollock

# கலவரமான கனவுகள்

கனவுகள் மீது நமக்கு கட்டுப்பாடே இல்லை. கனவுகளை முன்கூட்டியே தீர்மானிக்க முடிவதில்லை. அது பல சமயம் சங்கடமாக இருக்கிறது. கனவுகளுக்கு பலன்கள் வேறு சொல்லித் தொலைக்கிறார்கள். புதுமைப்பித்தன் பிசாசுகளைப் பற்றி சொன்னதைப் போல் நம்மால் கனவுகளை நம்பாமல் இருக்க முயன்றாலும் ஏதோ சலனப்படுத்தி விடுகிறது. எப்படி இந்த மாதிரி சம்பவங்களெல்லாம், இந்த மாதிரி முகங்களெல்லாம் நமக்குள் தோன்றி மயக்குகிறதென்று புதிராக இருக்கிறது. இதற்கெல்லாம் ஒரு சூசகமான அர்த்தம் இருக்கக் கூடுமா?

அதுவும் கடந்த சில நாட்களாக எனக்குக் கனவுகளில் சாதாரண மனிதர்கள் வருவதில்லை. எல்லாம் பெரிய பெரிய ஞானிகள், பெரிய பெரிய அரசியல்வாதிகள், நடிகர்கள். என் சராசரி வாழ்க்கையில் அண்டவே முடியாத ஆளுமைகள். இவர்கள் ஏன் வருகிறார்கள் என்று தெரிவதில்லை. இவர்கள் கனவில் வந்ததால் எனக்கு என்ன பலன் நேரப் போகிறதோ, ஏதாவது நேரக் கூடுமோ என்று குழப்பமாகவும் இருக்கிறது.

இப்படித்தான் போன செவ்வாய்க்கிழமை நள்ளிரவில் ஏசுநாதர் வந்தார். நான் திடுக்கிட்டு நின்றேன். எனக்கு மண்டியிட்டு வழக்கமும் இல்லை. பேசாமல் பார்த்துக்கொண்டு நின்றேன். இந்த மாதம் இவரை பலர் நினைத்துக்கொள்வார்கள். ஆனால், எந்த நினைப்புமில்லாமல் இருந்த என் கனவைத் தேடி இவரா?



“ஒரு நடை போகலாமா?” என்று கேட்டார். நான் தயங்கினேன். “தயவு செய்து வாருங்கள். பேசிக்கொண்டே போகலாம்” என்றார். நான் தயக்கமுடன் நடக்க ஆரம்பித்தேன். “நீங்கள் முதலில் செல்லுங்கள் உங்கள் பின்னால் நடந்து வருகிறேன்” என்றார். ”எனக்குப் பின்னால் நீங்களா?” என்றேன். ”ஆமாம், அதனாலென்ன? இதற்கெல்லாம் பெரிய உள்ளர்த்தமே இல்லை” என்றார். நான் குறுகிப்போய் புரண்டு படுத்தேன். மறைந்து போய்விட்டார்.

மறு வெள்ளிக்கிழமை சங்கராச்சாரியார் வந்தார். மிக சகஜமாக சற்று விடிகாலை நேரமாக இருந்தது. அவர் வழக்கமாக ஜபம் செய்யும் குளக்கரையில் என்னோடு உட்கார்ந்துகொண்டு தோள் தட்டி அன்புடன் தன் தம்பியைப் போல், “என்ன சௌக்கியமா?” என்றார். நான் கலவரமடைந்தேன். விலகி நின்று கைகட்டி வாய் பொத்திக்கொள்ள முயன்றேன். அவரோ என்னை அருகில் உட்கார்த்தி வைத்துக்கொண்டு ஏதோ பேசிக் கொண்டிருந்தார். கொஞ்சம் கூட ஆன்மீக விஷயமாக இல்லாமல் எல்லாம் லௌகீகமாகவே இருந்தது.

“வீட்டில் பவர் கட் எப்படி? கொசுத் தொந்தரவு இருக்கிறதா? ஆட்டோக்காரா சிலபேர் நல்லவாளாவும் இருப்பா, இல்லையா?” என்று பேசுகிறார். எனக்கு மிகவும் திகைப்பாக இருந்தது. வாயெழவில்லை. அவருக்கு நமஸ்காரம் கூடப் பண்ண முடியவில்லை அதற்குள் கண் விழித்துக்கொண்டேன். இவர் எப்படி கனவில் தோன்றினார்? கனவில் வந்து என் உபாதைகளுக்கு விடிவு சொல்லியிருந்தால்கூட நன்றாக இருக்கும், அதுவும் இல்லை.

ஒரு திங்கட்கிழமை என்று நினைக்கிறேன். விடிந்தும் தூங்கிக் கொண்டிருந்தேன். இல்லை கனவு கண்டு கொண்டிருந்தேன். அப்போதுதான் புத்தர் வந்தார். “புத்தர் இன்னும் எத்தனை யுகங்கள் மனித ரூபத்தில் வந்து கொண்டிருப்பார்?” என்று வியப்பாக இருந்தது.

“ஒரு வேளை அவர் இன்னும் மனித வடிவத்தைத் துறந்து பஞ்ச பூதங்களாக மாறவில்லையோ பூரண முக்தியடையா



நிலையில் இருக்கிறாரோ என்று ஆச்சரியமாக இருந்தது. அவருக்கு என்னிடம் பேச என்ன இருக்கிறதென்று தெரியவில்லை. ஊரைப் பற்றி உலகத்தைப் பற்றியும் எதுவும் அவரால் சந்தோஷமாக நம்பிக்கையாக எதையாவது சொல்லக் கூடுமா தெரியவில்லை. நான் நினைத்தது சரியாகத்தான் போய்விட்டது. அவர் என் தோளைப் பிடித்துக்கொண்டு சற்று அழுதார். நான் சமாதானப்படுத்த முயன்றேன் எனக்குத் துணிச்சலாகவும் இருந்தது...

"நாங்கள் நன்றாக இருக்கிறோம் அய்யாஞ் வருத்தப் படாதீர்கள்... ஆறுதலாக அமைதியாக இருங்கள். .எல்லாம் சரியாகி விடும் நாங்கள் துக்கத்துடன் சந்தோஷமாகத் தான் இருக்கிறோம்.." என்று சொன்னேன். ஆனால், அவருக்கு கனவை விட்டுப் போக மனமே இல்லைஞ் "துக்கம் தான் வாழ்க்கை" .என்று சொல்லிவிட்டு மறைந்து போனார். . .நான் மிகுந்த துக்கத்துடன் அவரை போகச் சொல்லிவிட்டு தூங்க முயன்ற போது விழித்துக்கொண்டு விட்டேன்

எனக்கு இவர்களெல்லாம் என் கனவில் ஏன் இடம் பிடிக்கிறார்கள் என்று குழப்பமாகவும் இதற்கெல்லாம் அர்த்தம் விளங்காமலும் இருந்தது. ஆனால், அடுத்தடுத்த கனவுகளில் வந்த ஆளுமைகள் என்னை ஆட்டி அலைக்கழித்து விட்டன.

ஏதோ ஊர்வலத்தில் போய்க் கொண்டிருந்த கலைஞர் கருணாநிதி எங்கோ தெருவோரத்தில் நின்று கொண்டிருந்த என்னைப் பார்த்து இறங்கி வந்து சிரித்து பேச ஆரம்பித்துவிட்டார்.

"என்னை உங்களுக்கு தெரியாதய்யா!" என்கிறேன்.

"இல்லை இல்லை தெரியும் எத்தனையோ வருஷங்களுக்கு முன் பார்த்தாலும் எனக்கென்ன மறந்தா போய்விடும். என் பத்திரிகை ஆபீஸில் பார்த்திருக்கிறேன்.. பேசி இருக்கிறேன்... நீ கூட முத்தாரத்துலெ ஒண்ணு எழுதினே! நீ தான் என்னை மறந்துட்டே!" என்கிறார்.

அவர் மீண்டும் என்னை ஏன் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று புரியவில்லை. ஊர்வலம் எங்கள் சந்திப்பினால் நின்று போய்விடுகிறது. நான் மிகவும் சங்கடப்பட்டு விலகி நகர்ந்து கூட்டத்தோடு போக பிரயத்தனப் படுகிறேன். அவர் மேலும் ஏதோ பேசிக் கொண்டிருக்கிறார். அவர் பேச்சு எனக்குத்தான் விளங்கவில்லை.. வெகுதூரம் நகர்ந்து போய் மெதுவாக திரும்பிப் பார்க்கிறேன் அவர் இன்னும் தெரிந்துகொண்டுதான் இருக்கிறார்.

என்ன இப்படி சம்பந்தமில்லாத ஒரு கனவு என்று அலுத்துக் கொண்டே எழுந்து கொண்டிருக்கிறேன்.

வர வர தூங்குவதற்கே பயமாக இருக்கிறது. இருந்தாலும் முடியவில்லை. ஏதோ பலகீனத்தில் நேற்று அயர்ந்து தூங்கிவிட்டேன். "அய்யொ.. இதென்ன..." ரஜினிகாந்த். ரஜினிகாந்தா இது. என்னைக் கை குலுக்கி அழைத்துக்கொண்டு வேகமாக இங்குமங்கும் நடக்கிறார். அசாத்திய ஆட்ட நடை. அவர் நடை எப்போதுமே எதோ ஒரு கற்பனையான கால்பந்தை உதைத்து விரட்டிக்கொண்டு போவது போலவே இருக்கும்.. அவர் மாதிரி என்னால் நடக்க முடியவில்லை. தடுமாறித் தொங்கிக்கொண்டு இழுபட்டபடியே பின்னால் போகிறேன். அவரோ அவர் வழக்கமான சிரிப்புடன் திரும்பி நிற்கிறார்.

"வாங்க பேசிக்கிட்டே போகலாம். சும்மா பல விஷயத்தைப் பத்திப் பேசறதை நான் லைக் பண்ணறதில்லே...இருந்தாலும் சில விஷயத்தை பலவிதமா பேசினாலே இண்ட்ரெஸ்டாக இருக்கும். பெரியவங்க எழுதறதெல்லாம் நான் படிக்க அறிவு இருக்கிறதா? எனக்குத் தெரியலே. ஆனா, ஒரு

பார்வை ஒரு லுக், ஒரு சின்ன வார்த்தை... அதுலெ புரிஞ்சு போவுது, தெரியுது. அதுதான் திருஷ்டி. அருளு. "ஹா ஹ.ஹா வாங்க டீ சாப்பிடலாம்.." என்று எங்கோ அழைத்துக் கொண்டு போகிறார்,

எப்படி அத்தனை மக்கள் கூட்டத்துக்கு மத்தியில் தெருவில் தொந்தரவில்லாமல் ரஜினியும் நானும் போய்க் கொண்டிருக்கிறோம்.. நம்பவே முடியவில்லை... அப்படி மக்கள் கவனிப்பில்லாமல் நடப்பது ஒன்றும் எனக்கு எந்த ஒரு பெரிய வித்தியாசமோ பாதிப்போ இல்லை. ஒரு பெரிய விஷயமே இல்லை. ஆனால், அவரால் எப்படி இந்த மாதிரி நிலைமையை சகஜமாக எடுத்துக்கொள்ள முடிகிறது?

குழப்பமாக இருக்கிறது. கனவுகளே இல்லாமல் தூங்க வேண்டுமென்று இப்போது கடவுளைப் பிரார்த்தித்துக் கொள்ளுகிறேன். அடுத்தது கடவுளே கனவில் வந்து விடுவாரோ!!

மனச் சிக்கல் மலச்சிக்கல் இல்லாமல் இருந்தால் கனவுகள் வராதென்று எங்கோ படித்திருக்கிறேன். அது இரண்டும் சாத்தியமேயில்லை, என்னைப் போன்றவர் வாழ்க்கையில். இனிமேல் கனவுகள் கண்டாலும் அதை வெளியே சொல்லுவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டேன்.

அதுதான் மற்றவர்களுக்குப் பெரிய ஆறுதலாக இருக்கும் என்று தோன்றுகிறது. ●

**வைதீஸ்வரன்** <vydheesw@yahoo.com>

# உமா சக்தி கவிதைகள்

1. அனிச்ச



வெதுவெதுப்பான சதுப்பு நிலத்தினூடே
வெகு காலமாக நடந்து செல்கிறாய்
ஒருபோதும் தாமதிக்காதே
ஆயிரம் பிறை கண்ட ஒரு சூஃபி ஞானியிடம்
உன் நிறங்களை மறைத்து வைக்காதே
குளிரலையின் மீது விழுந்த சிறு இலையென
மிதந்தலைந்து காற்றின் பாதையில் செல்வாய்
துடுப்பில்லாத இத்தோணியிலிருந்து
விடுபடும் ஓர் நொடியே இவ்வாழ்க்கை
இமைக்காது விடுபட்ட கணத்தில்
நீங்கா உறக்கத்தில் வீழ்வாய்
அனிச்ச
அனிச்ச

2. உருமாறும் பூனையைப் போன்றதொரு காமம்

விழிகள் மூடிய அடர் இருளில்
மரணமாய் கைத் தட்டி அழைக்கிறது
வழிந்தோடும் ஆற்று நீராய்
உள்ளுக்குள் சலசலக்கிறது
பின் புறாவைப் போல தோள்களின்
மீதேறி காதில் பேசியது
ஒளிச் சேர்க்கையில்
வால் நட்சத்திரப் பூப்போல
எரிந்து எரிந்து வீழ்கிறது
ஒன்றும் அறியாமல்
எட்ட நின்று வேடிக்கைப் பார்க்கிறது
மிதந்து மிதந்து தலைக்குள்ளே
மேகத்திரளாய் அலைந்து திரிந்து
ஒவ்வொரு விழி அசைவிலும்
உயிர்ச் சுவை கூட்டியது
மிருகமாய்த் தின்று தீர்த்தபின்
பிறிதொரு நாளில்
பிரியாவிடை பெற்றது

3. இறுதி வார்த்தை

நித்தமும் மெழுகாய் கரைகிறது
மறதியின் நினைவுகள்
முன்பு எப்போதோ நுகர்ந்த வாசம்
திரும்பிப் போக முடியாத சாலை
திறக்க இயலாத கனவுப் புத்தகம்
பார்க்க மறந்த பசுமைக் காட்சிகள்
இசை நழுவிய பாடல் குறிப்புகள்
மனதை திறக்கும் மந்திரச் சொல்
ஒன்று கூட இப்போது
என்வசம் இல்லை.
இக்கவிதையின்
இறுதி வார்த்தையைப் போல ●

**உமா சக்தி** <um.parvathy@gmail.com>

# பின்நகர்ந்த காலம்

'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்று தமிழ்நாட்டில் ஒரு சொலவடை உண்டு. சொலவடைகள், பழமொழிகள் எல்லாமே மனிதர்களின் ஆண்டாண்டு காலப் பட்டறிவிலிருந்து எழுந்தவை. நல்ல பழக்கம் கெட்ட பழக்கம் என்று இருக்கத்தான் செய்கின்றன. உடம்பும் மனமும் எதைத் தேர்வு செய்து நடைமுறைப்படுத்துகிறதோ, அதுவே பழக்கமாக மனிதர்களிடம் படிகிறது. பழக்கத்திலிருந்து விடுபடுவது கடினம். நல்ல பழக்கமானாலும் கெட்ட பழக்கமானாலும் மனதோடு மனதாக ஆழமாகப் பதிந்துவிட்டால் அதிலிருந்து விடுபடவே முடியாது.

நான் திருநெல்வேலி ஷாஃப்டர் ஹைஸ்கூலின் ஈஸ்டர்ன் பிராஞ்ச் கிளையில் படித்தபோது (இதே பள்ளியில் எனக்கு இரண்டு வருடங்கள் முன்னதாக வண்ணதாசன் படித்தார். இது ஒன்றும் உலகைப் புரட்டிப் போடுகிற தகவல் அல்ல. ஒரு நினைவுப் பதிவு, அவ்வளவே.) 'கட்மீசை' என்று மாணவர்கள் ஒரு ஆசிரியருக்குப் பேர் வைத்திருந்தார்கள். மிகச் சிறிய மீசை வைத்திருந்தார். அவர் அடிக்கடி இரண்டு உதடுகளையும் சுழித்துக்கொண்டே இருப்பார். இது அவருடைய பழக்கம்.

ஸ்ரீவைகுண்டம் குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப் பள்ளியில் இரண்டு ஆண்டுகள் செவன்த் ஃபார்ம் படித்தேன். இருளப்பதாஸ் என்ற தமிழாசிரியருக்கு சதா சனித் தொந்தரவு. மூக்குப் பொடி போடுகிற பழக்கமும் உண்டு. கனத்த சரீரி. நாற்காலியில் உட்கார்ந்துகொண்டேதான் பாடம் நடத்துவார். அவர் வந்துவிட்டுப் போனால், நாற்காலியைச் சுற்றி சளியைச் சிந்திப் போட்டிருப்பார். அவர் பழக்கம் அது.

என் அப்பாவுக்கு வெற்றிலை, பீடிப் பழக்கமெல்லாம் இருந்தது. ஐந்து பூ பீடி குடிப்பார். என்னைவிட்டே பீடி வாங்கி வரச் சொல்லுவார். அப்பாவுக்கு மதுப் பழக்கமும் உண்டு. ஆனால், அவர் ரொம்ப அமைதியானவர். குழந்தைகளைச் சத்தம் போடவே மாட்டார். அவர் சாப்பிட உட்காரும் போது எங்களை எல்லாம் உட்கார வைத்து சோறு உருட்டிப் போடுவார். நாங்கள் சாப்பிட்ட பிறகுதான் அவர் சாப்பிடுவார். அபாரமான ஆங்கில அறிவு. அலுவலகத்தில் அவர் 'நோட்' எழுதினால் ரொம்ப ஆழமாக இருக்குமாம். அம்மாவிடம் சண்டை போட்டதே இல்லை. ஆனால், வெற்றிலை - பாக்கு, பீடி, மது இவையெல்லாம் பழகியிருந்தார். கொடிய வறுமை வருகிற வரை இந்தப் பழக்கங்களிலிருந்து அவரால் விடுபட முடியவில்லை.



நாங்கள் கருங்குளத்திலிருந்தபோது ஒன்றிரண்டு முறை நானும் வெங்கடசுப்பையரின் மகனும் திருட்டுத்தனமாக சிகரெட் பிடித்திருக்கிறோம். அப்போதுகூட அது பழக்கமாகவில்லை. பாளையங்கோட்டையில் வக்கீலிடம் வேலை பார்த்தபோது மெந்தால் உள்ள 'கூல்' சிகரெட்டை எப்போதாவது பிடிப்பேன். பாண்டிச்சேரியில் 'புதுவைக் குரல்' பத்திரிகையில் வேலை பார்த்த போது பிரபஞ்சனும் நானும் சார்மினார் சிகரெட்களை ஊதித் தள்ளுவோம். சார்மினார் சிகரெட்டின் காரமும் வாட்டிய புகையிலையின் மனமும் மனதுக்கும் பிடித்துப் போய் பழக்கமாயிற்று.

நான் தனியே வாழ்ந்த காலம் அது. என் மீது அக்கறை கொண்டு என் பழக்கத்தைக் கேள்வி கேட்க யாருமில்லை. தனிமை, சுதந்திரம் என்பது ரொம்ப ஆபத்தானது. மனக் கட்டுப்பாடு இல்லாவிட்டால் தவறான பழக்கங்கள் தொற்றிக்கொள்ளும். நான் இப்படித்தான் ஆனேன். சிகரெட் பிடிக்கிற பழக்கம் இப்படித்தான் ஏற்பட்டது. ஒரு வித்தியாசத்துக்காக செய்யது பீடியையும் பிடிப்பேன்.

கஞ்சா இருக்கிறதே. அதை விட்டு வைக்கலாமா? 'துக்ளக்' அலுவலகத்தில் அட்டெண்டராக இருந்த சுப்பிரமணியத்திடம் கஞ்சா வாங்கிவரச் சொன்னேன். ஜெயகாந்தனுடைய ஆழ்வார்பேட்டை மடத்தில், கஞ்சாவைச் சுட்ட மண்குழாயில் போட்டு எல்லோரும் மாற்றி மாற்றி இழுப்பார்கள். அறை முழுவதும் புகை மண்டலமாக இருக்கும். ஆனால், கஞ்சாவில் எனக்கு நாட்டம் ஏற்படவில்லை. என்னிடம் இருந்து செய்யது பீடியை வாங்கி எடிட்டர் கூட ஒன்றிரண்டு முறை இழுத்துப் பார்த்திருக்கிறார். பத்திரிகை அலுவலகங்களில் அப்போது, சிகரெட் பிடிக்க தடை கிடையாது. சிகரெட் பிடித்ததால்தான் சிந்தனை ஓடும் என்று நம்பிக்கை வேறு எழுத்துலகத்தில் உள்ளதே. இந்தக் காலக் கவிஞர்களும் எழுத்தாளர்களும் குடிக்க வேண்டும் என்பதை எழுத்துலக விதியாகவே கொண்டிருக்கிறார்கள்.

ஆனால், நான் பழகிய வல்லிக்கண்ணன், தி.க.சி., சி.சு. செல்லப்பா இவர்களிடம் எந்த லாகிரி வஸ்துப் பழக்கமும் கிடையாது. தி. ஜானகிராமன் வெற்றிலை போடுவார். படிமக் கவிதை, அதுவும் நவீனமான படிமக்கவிதை என்பது, தமிழில் எழுதுகிற எல்லோருக்கும் வாய்த்துவிடாது. கவிஞர்களில் 99



சதவிகிதம் பேர் காட்சி அல்லது கருத்துகளைக் கவிதையாக்குகிறவர்கள்தான். ஆனால், தர்மு சிவராமின் கவியுலகம் தனித்துவமானது. அப்பேர்பட்ட தர்முவிடம் லாகிரிப் பொருட்களை உபயோகிக்கிற பழக்கம் கிடையாது. வெறும் பாக்குகூடப் போடமாட்டார். கட்டற்ற மனநிலைதான் எழுதுவதற்குத் தேவை என்பதை தர்மு நிராகரித்தவர்.

தனிமனிதர்களின் பழக்கவழக்கங்களைப் போல், சமூகத்திற்கும் நாட்டிற்கும்கூட காலம் காலமாகப் படிந்து போன பழக்கவழக்கங்கள் இருக்கின்றன. அது போல்தான் பத்திரிகை, எழுத்துலகிலும் தவறாகவோ சரியாகவோ சில பழக்கவழக்கங்கள் படிந்து போயுள்ளன.

அந்தக் காலத்தில், அதாவது 1970—க்கள் வரை தி. ஜானகிராமன், 'ஆர்வி' போன்ற பல எழுத்தாளர்களிடம் வெற்றிலை போடுகிற பழக்கம் இருந்தது. 'சுதேச மித்திரன்' தினசரி அலுவலகம் 1973வாக்கில் இன்றைய 'இந்து தமிழ் திசை' அலுவலகம் இருக்கிற இடத்தில் இருந்தது. அங்கே உதவியாசிரியர்களின் மேஜை மீது ஒரு தம்ளரில் தண்ணீரினுள்ளே வெற்றிலைகளை நட்டுக்குத்தாகச் சொருகி வைத்திருப்பார்கள். அனேகமாக எல்லா மேஜைகளிலும் வெற்றிலைத் தம்ளர்களைப் பார்க்கலாம். ஆனந்த விகடனிலும் வெற்றிலை, பாக்கு, புகையிலைப் பிரியர்கள் பலர் இருந்தார்கள். இப்போது, வெற்றிலை - பாக்குக்கு அரசு தடை போடவில்லை. சிகரெட்டுக்குத் தடை வந்துவிட்டது. ஆனாலும், சிகரெட் பிடிக்கிறவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள்.

தமிழ்நாட்டில் 'மாத நாவல்' என்ற வகைமையை முதன் முதலில் ஆரம்பித்து வைத்தது 'தினத்தந்தி' நிறுவனம்தான். தினத்தந்தி நிறுவனம் 'ராணி முத்து' என்ற பேரில் ஏற்கெனவே தமிழில் வெளிவந்திருந்த அகிலன், நா.பார்த்தசாரதி போன்ற, அறுபதுகளின் வெகுஜன நாவலாசிரியர்கள் எழுதிய நாவல்களைச் சுருக்கி தனிப் புத்தகமாக வெளியிட்டது. உண்மையில் இந்த நாவல் சுருக்கம் என்பதைத் தொடங்கி வைத்தது 'மஞ்சரி' என்ற மாதப் பத்திரிகைதான்.

மஞ்சரி பத்திரிகை, பல பிறமொழி நாவல்களை மாதந்தோறும் சுருக்கி வெளியிட்டு வந்தது. இதைப் பின்பற்றி 'ராணிமுத்து' தமிழ் நாவல்களைச் சுருக்கி தனிப் புத்தகமாகவே வெளியிட்டது. அதற்கு நல்ல வரவேற்பு இருந்தது.

குமுதமும் ராணிமுத்துவின் வெற்றியைப் பார்த்து, எழுத்தாளர்களிடம் குறு நாவல்களைப் புதிதாகவே எழுதி வாங்கி, தனிப் புத்தகமாக மாதந்தோறும் வெளியிட்டு வந்தது. திருச்சியில் செயல்பட்டு வந்த 'மோதி' என்ற ஆபரண, வைர நகை வியாபாரிகள் மோதி பிரசுரத்தைத் தொடங்கினர். இந்த மோதி பிரசுரம் ஜெயகாந்தனுடைய புதிய குறுநாவல்களை மட்டுமே மாதா மாதம் வெளியிட்டது.

'மக்கள் குரல்' என்ற தினசரியை, சென்னை பத்திரிகையாளர் சங்கத்திலிருந்த 'டி.ஆர்.ஆர்' என்ற டி.ஆர். ராமசாமியும் சண்முகவேலுவும் தொடங்கினார்கள். 'மக்கள் குரல்' தினசரியின் சார்பில் 'அலிபாபா' என்ற வாரப் பத்திரிகையைத் தொடங்கினார்கள். இதன் ஆசிரியராக அறந்தை நாராயணனை நியமித்தார்கள். 'அறந்தை' என்று நண்பர்களால் அழைக்கப்பட்ட அறந்தை நாராயணன் அப்போது சென்னை பீட்டர்ஸ் காலனியில் வசித்து வந்தார். அவர் வலது கம்யூனிஸ்ட் கட்சியின் 'ஜனசக்தி' பத்திரிகையில் ஆசிரியராகப் பணியாற்றியவர். 'ஜனசக்தி'யில் அவர் கடைசிப் பக்கப் பத்தி பிரபலமானது.

பீட்டர்ஸ் காலனியில் ஞாநி வீட்டில் பலமுறை அறந்தையைப் பார்த்துப் பேசியிருக்கிறேன். அவர் எழுதிய 'தமிழ் சினிமாவின் வரலாறு' என்ற கனமான ஆய்வு நூல் மத்திய அரசின் பரிசைப் பெற்றது. அறந்தை 'அலிபாபா'வின் ஆசிரியரானபோது, என்னிடம் ஒரு சிறுகதை கேட்டார். எழுதிக் கொடுத்தேன். அலிபாபாவில் இரண்டு சிறுகதைகளை எழுதினேன். இரண்டையும் எனது எந்தச் சிறுகதைத் தொகுப்பிலும் சேர்க்கவில்லை. அவை ரொம்ப ரொம்பச் சாதாரணமான தரத்தில் இருந்தன. சில மாதங்களில் 'அலிபாபா' பத்திரிகை நின்றுவிட்டது.

'அலிபாபா' நின்ற பிறகு அறந்தை, தானே சொந்தமாக 'கல்பனா' என்ற மாத நாவல் இதழைத் தொடங்கினார். ஜெயகாந்தனின் குறுநாவல்களை மாதா மாதம் தனி நூலாகவே வெளியிட்டு வந்த மோதி பிரசுரம் சில மாதங்களிலேயே நின்று போனதால், அது வெளியிட்டு வந்த ஜெயகந்தனின் நெடுங்கதைகளை 'கல்பனா' மாத இதழ் தொடர்ந்து வெளியிட்டது. ஆனால், சில இதழ்களுடன் கல்பனாவும் கடையை மூடிவிட்டது.

இன்று, மறைந்த ஜேப்பியாரை, சத்திய பாமா பொறியியல் கல்லூரி முதலான பல கல்லூரிகளை நிறுவியாராகத்தான் உலகத்திற்குத் தெரியும். ஆனால், 1973-ல் அவர் அதிமுகவின் முன்னணிப் பேச்சாளர்களில் ஒருவர். 1978-லிலோ 80-லோ பிரபல சரித்திர நாவலாசிரியரான சாண்டில்யனை ஆசிரியராக நியமித்து, 'கமலம்' என்ற பத்திரிகையை ஆரம்பித்தார். கமலமும் பெரும்பாலான புது முயற்சிகளைப் போல, சில இதழ்களிலேயே நிறுத்தப்பட்டுவிட்டது.

இந்துமதி எழுத ஆரம்பித்த போது 'கணையாழி' போன்ற சிற்றிதழ்களில்தான் எழுதினார். பிறகு, விகடனிலும் குமுதத்திலும் தொடர்கதைகள் எழுதிப் பிரபலமானார். ராயப்பேட்டையில் இருந்த டால்டன் நிறுவனம் இந்துமதியை ஆசிரியராக்கி 'அஸ்வினி' என்ற பத்திரிகையைத் தொடங்கியது. அஸ்வினியில் விக்கிரமாதித்தனும் ஞாநியும் உதவியாசிரியர்கள். அஸ்வினியும் அதிக நாட்கள் வெளிவரவில்லை.

சாண்டில்யனும் இந்துமதியும் தமிழ் வாசகர்கள் மத்தியில் மிகப் பிரபலமாக இருந்தவர்கள்தான். அவர்களுடைய பிரபல்யத்தை முதலாகக் கொண்டுதான் கமலமும் அஸ்வினியும் வெளிவந்தன. ஆனால் இவையும் நின்றுவிட்டன. வெறும் பிரபல்யம் எடுபடவில்லை.

சாவி குங்குமத்தை ஆரம்பித்து வைத்துவிட்டு சில மாதங்களிலேயே வெளியேறிவிட்டார். 'சாவி' என்ற பெயரிலேயே ஒரு வார இதழைச் சொந்தமாகத் தொடங்கினார். சாவியே 'விஸிட்டர் பத்திரிகை ஆசிரியராக இருந்த 'அனந்த்'துவை 'விஸிட்டர்லென்'ஸின் ஆசிரியராக்கினார். இளைஞர்களுக்காக,'திசைகள்' என்ற பத்திரிகையையும் சாவி தொடங்கினார். இதன் ஆசிரியர் - மாலன். விஸிட்டர் லென்ஸூம் திசைகளும் வழக்கம் போல் சில இதழ்களுடன் நிறுத்தப்பட்டன. 'சாவி' மட்டும் சற்று அதிகநாட்கள் வெளிவந்து நின்று போனது.

'குமுதம்' தொடங்கப்பட்டபோது, அதன் ஆசிரியரான 'எஸ்.ஏ.பி' என்ற எஸ்.ஏ.பி. அண்ணாமலை பிரபலமான முன்னாள் பத்திரிகையாசிரியரோ பிரபலமான எழுத்தாளரோ அல்ல. ஆனால், 'குமுதம்' ஐந்து, ஐந்தரை லட்சம் பிரதிகள் வரை 1970—க்களில் விற்பனையானது. 'சாவி' திறமையான பத்திரிகையாளர்தான் என்பதை அவர் ஆசிரியராக இருந்த தினமணி கதிரிலும் பிறகு குங்குமத்திலும் வெளிப்படுத்தினார். ஆனால், அவரே நடத்திய 'சாவி' லாபகரமாக இல்லை. பத்திரிகையுலக விற்பனை, வியாபார விதிகள் புரியாத புதிர்கள்.

இப்போது 'காழியூர் நாராயணன்' என்றால் அவரைப் பிரபலமான ஜோதிடராகத்தான் தமிழர்கள் அறிவார்கள். ஆனால், 1978-80 வாக்கில் அவர் பத்திரிகையாளராக இருந்தார். நாராயணனும் அவருடைய நண்பர் ஆர்தர் பயாசும் சேர்ந்து எழுதிய ஆங்கிலக் கட்டுரைகள் 'ஆன்லுக்கர்' பத்திரிகையில் தொடர்ந்து வெளிவந்தன. 1976-77 வாக்கில் 'துக்ளக்' அலுவலகத்திற்கு நெட்டையான ஜிப்பா அணிந்த ஒரு இளைஞர் அடிக்கடி 'சோ'வைச் சந்திக்க வருவார். சென்னை, மும்பை மாதுங்காவின் வாழும் ஆன்மீகவாதிகளுக்கு 'கிரி டிரேடிங் கம்பெனி' என்றால் நன்றாகத் தெரியும். இன்று இதன் கிளைகள் கோவை, மதுரை போன்ற நகரங்களிலும் உள்ளன. இந்த கிரி டிரேடிங்கை நிறுவிய கிரியின் மூத்த புதல்வர்தான் துக்ளக்கில் எழுத விரும்பிய அந்த உயரமான, ஜிப்பா அணிந்த இளைஞர். அவர் பெயர் ஹரி. டி.எஸ்.வி. ஹரி.

ஹரிக்கு ஆங்கிலம் மலையாளம் ஹிந்தி, மராத்தி முதலான மொழிகளைச் சரளமாக எழுதவும் பேசவும் தெரியும். அவரும் துக்ளக்கில் அவ்வப்போது



புலனாய்வுக் கட்டுரைகளை எழுதியிருக்கிறார். தனியார் தொலைக்காட்சிகள் இல்லாமல் தூர்தர்ஷன் மட்டுமே இந்தியாவில் ஒளிபரப்பாகி வந்த 1980-க்களில், பி.ஆர்.சோப்ரா தயாரித்த மஹாபாரதம் ஞாயிறு தோறும் காலை தூர்தர்ஷனில் ஒளிபரப்பானது. ராமானந்த சாகரின் ராமாயணத்தைப் போல் பி.ஆர். சோப்ராவின் மஹாபாரதமும் இந்திய மக்களிடையே பிரபலமாக இருந்தது. அந்த மஹாபாரதத் தொடரின் கதை-வசனத்தை வாரந்தோறும் வெளியிடும் உரிமை துக்ளக்கிற்கும் தினமலருக்கும் கிடைத்தது. துக்ளக்கில் ஹிந்தி மூலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்த்தவர் டி.எஸ்.வி. ஹரி. தினமலரில் வெளிவந்த மொழிபெயர்ப்பை விட, துக்ளக்கில் வெளிவந்த ஹரியின் மொழிபெயர்ப்பு, தமிழ் வாசகர்கள் மத்தியில் மிகுந்த வரவேற்பைப் பெற்றது.

மஹாபாரதத் தொடரின் கதை - வசன மொழிபெயர்ப்பு வெளிவருவதற்கு முன்பு ஒரு லட்சத்துப் பத்தாயிரம் பிரதிகள் விற்பனையான துக்ளக், மொழிபெயர்ப்பு வெளிவர ஆரம்பித்த பிறகு, இரண்டு லட்சம் பிரதிகள் விற்பனையைத் தொட்டது. துக்ளக் தொடங்கப்பட்டு 49 ஆண்டுகள் ஆகிவிட்டன. இந்த 49 ஆண்டுகளில், மிக அதிகபட்ச விற்பனை அந்த மஹாபாரத தொலைக் காட்சித் தொடரின் தமிழ் மொழிபெயர்ப்பால் சாத்தியமானது.

ஞாயிற்றுக் கிழமை காலை ஒளிபரப்பாகும் மஹாபாரதத் தொடரின் ஹிந்தி கதை - வசனப் பிரதி புதனன்று மாலைதான் மும்பையிலிருந்து ஃபேக்ஸில் வரும். அதை இரவோடு இரவாக ‘துக்ளக்’ அலுவலகத்திலிருந்த ஹரி மொழிபெயர்ப்பார். அவர் ஹிந்தி கதை - வசனப் பிரதியைக் கையில் வைத்துக்கொண்டே, வாயால் அதைத் தமிழில் மொழிபெயர்த்துச் சொல்லுவார். டைப்பிஸ்ட் அதைக் காதில் வாங்கி, அவர் சொல்லும் வேகத்திற்கு இணையாக தமிழில் டைப் செய்வார். உடனே அது கம்போஸாகி, பிழைகள் திருத்தப்பட்டு ‘லே அவுட்’ செய்யப்பட்டு விடும். அப்பேர்பட்ட திறமைசாலி ஹரி. சமீபத்தில்தான் அவர் தனது 69 -வது வயதில் மரணமடைந்தார். ●

**வண்ணநிலவன்** <ramachandran.u49@gmail.com>

சிறுகதை | பொ. கருணாகரமூர்த்தி | ஓவியம்: Souza

# வாழ்வின் கைதி

ராம்குமாருக்கு வேலைபோய் மூன்று மாதங்களாகின்றன. அவன் இழந்தது மந்திரிப் பதவியோ, அவன் ஒரு நிலப்பிரபுவின் பிள்ளையோ அல்ல. ஒரு சாதாரண உயிரணிகச் (ஆம்புலன்ஸ்) சாரதி. அவனது மாதாந்த ஊதியமே அவன் குடும்பம் வதியும் இரண்டறை வீட்டின் வாடகைக்கும் அரிசி, பருப்பு, மரக்கறி, குழம்புக்கும் தேங்காய்நெய், உப்புப்புளி, குழந்தைகளின் உடுப்பு, லக்டோஜன் / செரியல் (தானிய) உணவுகள், மருத்துவச் செலவுகளுக்குமே அத்தாப்பத்தியமாயிருக்கும் (மட்டுமட்டாக). அந்த ஒரே வருமானத்தையும் இழப்பதென்பது அவஸ்தையிலிருக்கும் ஒரு நோயாளியின் உயிர்வளிக் குழாயைப் பிடுங்குவதைப்போல.

அவன் சகி மேகா அழகி. அப்பா சிவசங்கரன் அவளுக்கு வரன்தேட ஆரம்பிக்கவும் நிறைய ஜாதகங்கள் வந்து சேர்ந்தன. அவற்றுள் உறவிலும் ஒரு பையன் இருந்தான், இவளை அவனுக்கு நன்றாகவே தெரியும். இருந்தும் என்ன விநோதமென்றால், அவன் அவளது அப்பாவை ஆயுளுக்கும் நுகத்தடியில் மாட்டிவிடக்கூடியதொரு தொகையை சீதனமாகக் கேட்டதோடு, 25 சவரன் நகையும் கேட்டான். உறவு என்கிற உரிமையோடு சமைலறை வரைக்கும் வந்தவனை அவன் முகத்துக்கு நேரேயே, “போய்யா.... போ, எவளாவது மந்திரி வீட்டுப் பெண்ணாய்ப் பாரு” என்று விரட்டிவிட்டாள்!

வேறும் ஒரு வரன் வந்தது, பையனின் அம்மாவும் அப்பாவுமே சீர்திருத்தத் திருமணம் புரிந்துகொண்டவர்கள். சாதிய அடுக்கில் அப்பா இடைநிலை, அம்மா தலித்தாகவிருந்தும், அப்பா என்னடாவென்றால், “பையனின் தாய்மாமன் மகள் இவனை மடக்கப் பார்க்கிறாள்; அதைத் தடுத்திடணும்... தயவுசெய்து உங்க பொண்ணை என் மகனுக்குக் கொடுங்க” என்று அவள் அப்பாவிடம் மன்றாடினார். அதையும் மேகா மனசு ஏற்கவில்லை. நிர்த்தாக்ஷண்யமாய் “நோ” சொல்லிவிட்டாள். ராம்குமாரைப் பற்றி அதிகம் தெரியாது, அவன் பி.ஏ. படித்திருப்பதாகவும் அடர் முடியோடு துல்கர் சல்மானின் சாயலிலிருக்கவும் சம்மதித்துவிட்டாள். ‘தப்பாகத் தேர்வு செய்திடோமே’ என்று இப்போதான் கலங்குகிறாள்.



என்ன, இலக்கியத் தோழமைகளோடு சேர்ந்தால் கொஞ்சம் பீர் குடிப்பான், பாக்கெட்டில் சில்லறை கனத்தால் 2 சிகரெட் வாங்கி வீட்டுக்கு வெளியே நின்று புகைப்பான். தவிர வேறுவிதமான குடிப் பழக்கமோ, கூடாத சகவாசங்களோ இல்லைதான்.... பயபுள்ள தன் கிராப்பில, கவிதை, காப்பியம், இலக்கியம், திறனாய்வு, இலக்கியச் சந்திப்புகளில் குவிக்கிற கவனத்தை, தனக்கு நல்லதொரு வேலையைத் தேடிக்கொள்ள வேண்டும் என்கிற கரிசனையோ, தன் குடும்பத்தின் முன்னேற்றம் எதிர்காலம் பற்றிச் சிந்தனையோ இல்லாமல் விட்டேத்தியாய் இருகிறானே என்பதுதான் மேகாவின் ஆதங்கமும் கவலையும்.

“இந்த இலக்கியச் சந்திப்புகள் எல்லாம் எம் குடும்பத்துக்குச் சோறு போடுமாங்க....” என்றால், “கவிதையும் இலக்கியமும் உலோகாயத விஷயங்கள் அல்லக் கண்ணா, அததன் சுவை அறிந்தவர்களுக்குத்தான் அதன் அருமைபுரியும்.... இப்போ அங்கயற்கண்ணியம்மன் கோவில்ல தளிசை தட்டிற சாமிக்கு விரால் குளம்பின் டேஸ்டைப் புரியவைக்க முடியுமா.... ஏன்டி ஒரு சராசரிப் பொண்ணாகவே இருந்து என் இரசனைகளைப் புரியமாட்டேங்கறே...” என்பான்.

இத்தனைக்கும் மேகாவும் அச்சுப்பிச்சல்ல, அவளும் இளங்கலை (வர்த்தக முகாமைத்துவம்) முடித்தவள். “நான் இலக்கிய ஈடுபாடே வேண்டாங்கல... குடும்பப் பொருளாதாரநிலையில கொஞ்சம் ஸ்திரமாய்க் கால்களை ஊன்றி வைச்சப்புறம் அதுகளைப் பாத்துக்குங்களேன்” என்பாள்.

கல்யாணம் முடிந்து இந்த நாலரை ஆண்டுகள் தாம்பத்யத்தில இரண்டு குழந்தைகள் பெற்றுக்கொண்டாயிற்று. கூத்தனுக்கு மூணரை வயசு, சின்னப் பாப்பா மாயாவுக்கு 10 மாதங்கள். அவள் பிறந்த நாளுக்குகூட, பத்துப் பேரை அழைத்து விருந்தாடாவிட்டாலும் ஒரு கட்டிகையாவது (கேக்) அனுப்பாணையில் எடுப்பித்து அயற்குழந்தைகளுடனாவது பகிர்ந்து கொண்டாட முடியுதோ என்னவோ....

மேகாவின் அப்பா சிவசங்கரன் கடல் கடந்த தொலைத்தொடர்புத் துறையில் தொலைத் தொடர்பாளராகப் (டெலிகிறாபிஸ்ட்) பணிபுரிந்து இளைப்பாறியவர். இவர்களுடன் வாழ்ந்திருந்த காலத்தில் அவரின் ஓய்வூதியத்தில் அங்கே அடுப்புக்கள் தடையின்றிப் புகைந்தன. அப்பாவே இன்னும் குழந்தைகளுக்குச் சட்டைகளும் மேகாவுக்கு வருடத்துக்கு குறைந்தது 3 சேலைகளாவது வாங்கித் தருவார். இப்போவெல்லாம்




புடவை துணி வருஷம் தீபாவளி விஷேசங்களுக்கு வாங்குதே இல்லையென்றாகிவிட்டது. அப்பாவும் அவர் செல்லமகள் படப்போகும் கஷ்டங்களைப் பார்க்க வேண்டமென்றோ என்னவோ ஒரு இரவிலான தன் தூக்கத்தை மீளாததாக்கிக்கொண்டார்.

தரையில் வாழ எத்தனிக்கும் தாவரங்களில் காற்று, கனிமவளமின்மை, வறட்சி, இடநெருக்கடியென்று அனைத்துச் சூழல் உற்பாதங்களையும் எதிர்நின்று ஓங்கி வளரக்கூடியது சவுக்குமரம் ஒன்றுதான். சிவசங்கரனின் நண்பரான ஒரு அரசு பள்ளியாசிரியர், ஏழெட்டு வருடங்களுக்கு முன்னர் அவர் மனதில் என்ன தோன்றியதோ, பேரூராகவிருந்து ஒரு நகரமாகவே மாறிக்கொண்டிருக்கும் ஜெயந்திபுரத்தின் நடுவே ஒரு மளிகைக்கடையை, 'சவுக்கு களஞ்சியம்' என்கிற பெயரில் ஆரம்பித்தார். போட்டிகளில்லாத அவ் வியாபாரம் விரைவில் ஓஹோவென்று பெருகியொரு சவுக்கு பல்பொருள் அங்காடியாகி ஓங்கி மிளிரவும் அவர் ஆசிரியப் பணி நீங்கி முழுநேர வணிகராகிவிட்டார்.

அம்முதலாளியின் அறிமுகத்தால் ராம்குமாரின் குடும்பம் கொப்பியில் கணக்கு வைத்துக்கொண்டு மாதம் முழுவதுக்கும் அங்கே மளிகைச் சாமான்களை வாங்குவதும் பின் மாத இறுதியில் சம்பளம் வந்தானதும் அவர்களின் நிலுவையை அடைத்துவிடுவதும் வழக்கம்.

இப்போதும் மளிகைப்பொருட்கள் யாவும் தீர்ந்துபோச்சு, கடை நிலுவையும் எகிறி விட்டிருக்கிறது. "சும்மா வீட்டில் முடங்கிக்கொண்டு

இருக்காமல் கடைக்காரரிடம்போய் நிலமையை எடுத்துச் சொன்னால் புரிஞ்சுப்பார், தேவையான சாமான்களை வாங்கி வாங்க" என்று மேகா, ராம்குமாரை விரட்டிக் கொண்டிருக்கிறாள். அவன், 'சாரத்துக்குள் அரணை புகுந்தாலே நாளைக்கு விரட்டுவம்' என்றிருப்பவன், அவள் கூச்சலைக் காதிலேயே போடாமல், அசமந்தமாய் புதிதாக வெளிவந்திருக்கும் 'கூடாக்காமம்' கவிதைப் புத்தகத்தில் திளைத்துப் போயிருக்கிறான்.

"அட.... புத்தகத்தை வெச்சிட்டுப் போங்கப்பா... மாயாவைக் குளிக்க வார்த்துத் தூங்க வைச்சிருக்கேன். லக்டோஜன் நேற்றே காலி, பால்காரரும் இன்னிக்குக் கையை விரிச்சிட்டார். இப்போ அரைமணியில குழந்தை எந்திருச்ச உடனே பாலுக்குச் சன்னதமாடுவாள்.... பிறகு எனக்கு அவளைத் தாக்காட்டேலா..."

"சரி ஒரு காப்பி கொடு, குடிச்சிட்டுப் போறேன்."

"காப்பி தரேன்.... வெல்லமில்லாமத்தான் ஓகேவா...."

வெல்லம் இல்லாத காப்பி அவனது தொண்டையால் இறங்காது, முணுமுணுத்தபடி ஷேர்ட்டை எடுத்துப்போட்டுக்கொண்டு, மாயா எழும்பிவிடாமல் மேகாவின் ஸ்கூட்டியை ஐம்பது மீட்டருக்குத் தள்ளிக்கொண்டுபோய், அதை உயிர்ப்பித்துப் போனவன், பத்து நிமிஷத்தில் அதேவேகத்தில் வெறும்பையோடு திரும்பிவந்தான்.

"ஏங்க.... என்னாச்சு?"

"அங்கே முதலாளியில்லை.... பாங்குக்குப் போயிருக்கிறாராம், கடையில ஒரு புதுப் பையன்தான் நிற்கிறான், அவனுக்கு நாங்க எக்கவுண்ட் வைச்சிருக்கிற மேட்டர் தெரியுமோ என்னவோ, விளக்கம் சொல்லிக் கடன் கேட்கச் சங்கோஜமாய் இருந்திச்சு வந்துட்டன்."

ஆத்திரத்தோடு, "பையை இப்படிக் கொடுங்க...." என்று அவனிடமிருந்து பிடுங்கியவள், "மாயாவைப் பாத்துக்குங்க" என்றுவிட்டு, ஸ்கூட்டியில் தலையணி அணியாமலே பறந்துபோய் வேண்டிய சாமான்களோடு கால்மணி நேரத்தில் வந்திறங்கினாள்.

ராம்குமார், கடைப்பையன் என்றது ஒன்றும் அரைக்களிசான் பையனல்ல. இருபத்திரெண்டோ மூன்றோ வயசிருக்கும்.... பி.கொம் இறுதி எழுதிவிட்டு முடிவுகள் வரும்வரையில் மாமாவுக்கு உதவியாளனாக அங்கே ஸ்டோரில் நின்றிருந்தான். மேகா கடைக்குள் நுழைந்ததும் அவன் முகத்தில் ஒரு விகசிப்பு விரவும். மேகா தனியாகப்போகும் சமயங்களில் களவாக அளவெடுப்பதுபோல அவளை இரசித்துப் பார்ப்பான். அதில் அவனுள்ளான தகிப்பும் தாபமும் தெரியும். குற்றமில்லை இயற்கைதான், அவன் கடக்கும் வயசு அப்படி. ஆனாலும், என்றைக்கேனும் அவளிடம் சில்மிஷம் சீண்டல், கிண்டல்மாதிரி எதுவும் பேசமாட்டான். பேசிய சில வார்த்தைகளிலும் கண்ணியமாக இருந்தான். ஒருமுறை மாத்திரம், "மிஸிஸ். ராம்குமார்" என்று கௌரவமாக அழைத்து, "இஃப் யூ டோன்ட் மைன்ட்.... நான் ஒரு கொம்பிளிமெண்ட் சொல்லலாமா" என்றவன், அவள் சுதாகரிப்பதற்கிடையில், "கடைக்குவாற எங்கள் பெண் கஸ்டமர்களில்.... நீங்கதான் அழகி...." என்றான்.

அவனது நுண்ணயமான உபசார வார்த்தைகளால் அவளுக்கு உள்ளூரக் குளிர்ந்தாலும் அதற்கு எப்படி எதிவினையாற்றுதென்று தெரியவில்லை. ஆனாலும், புன்னகைத்துவிட்டு, "ஏதேது.... உங்க வேலைகளோட கஸ்டமர் பெண்களின் அழகுகளைக் கவனித்து வைக்கிறதுக்கும் மாமா தனியாகச் சம்பளம் போட்டுத்தாறாப்பல...." என்று பதிலுக்குக் கலாய்த்துவிட்டு வந்தாள். ஆனால், வீடு திரும்புகையில்த்தான், 'தான் வெறுமனே ஒரு 'தாங்ஸ'ுடன் விலகி வந்திருக்கலாமோ'வென்று சிந்தித்தாள். அவன் சொன்னதும் தப்பில்லை, நிஜந்தான்.

மேகா அழகாகத் தன்னை வெளிகிடுத்தி வந்தாளாயின், சதைபோடாமல் வார்ந்து வைத்ததுபோல் இருக்கும் அவளை இரண்டு குழந்தைகளின் தாயென்று எவரும் கணிக்க முடியாது, அத்தனை அம்சமாகச் 'சிக்'கென்றிருப்பாள். அழகும் சீனாவின் ஹாடி எறிகணையைப் போலத்தான்.... எல்லா ஆரையன்களிலும் (ஸிணீபீவீணீஸீ) மத்தாப்பாய்ச் சிதறி யாரை எவரையென்றில்லாமல் தாக்கும்.

ராம்குமாரது அரச மருத்துவமனை உயிரணிகம் (ஆம்புலன்ஸ்) ஓட்டுநர்கள் சங்கம் ஊதியவுயர்வும் பணிநேரக்குறைப்பும் கேட்டு பணிநிறுத்தம் செய்ததால் பணி இழந்தவர்களில் அவனும் ஒருவன் என்பதை எப்படியோ அந்தக் கடை யுவனும் அறிந்திருந்தான். அவள் கொடுத்த பொருட்களின் நிரலிலிருந்த அத்தனை பொருட்களையும் நொடியில் எடுத்துவந்து அவள் பையை நிரப்பி அவள் கையில்கொடுத்து, "உங்கள மாதிரி அழகா சாரி கட்ட யாருக்குமே வராது மாம், அதுக்குன்னு ஒரு போட்டி வைத்தா நீங்கதான் ஃபெர்ஸ்ட்" எனவும் மேகாவும், "தாங்ஸ் ஃபோர் யுவர் கைன்ட் கொம்பிளிமென்ட்" என்றுவிட்டு வந்தாள்.

மேகாவுக்குத்தான் இப்போது கஷ்டதசை. அவளைத் திருமணம் செய்த வேளையிலும் ராம்குமாருக்கு வேலை எதுவுமில்லை என்பது தெரிந்ததுதான். ஆனால், அவன் தான் படிச்ச இளங்கலையிலும் அரியேர்ஸ் வைச்சிருக்கேன்; இன்னும் முடிக்கவில்லை என்றபோது, லேசாக அதிர்ந்தாள். ஆனாலும், அவர் தன் அரியேர்ஸை விரைவில் முடித்துக்கொண்டு சின்னதாகவேனும் ஒரு வேலையில் நுழைந்துவிடுவான் என்று நம்பிக்கை தளராமல் இருந்தாள். திருமணத்தின் பின் முதல் ஆறுமாதங்கள் வேலையில்லாமல் அவளைச் சுற்றிக்கொண்டு வீட்டிலேயே இருந்தான். கூத்தன் வயிற்றில் உண்டாகிவிட்டான்.

'உத்தியோகம் புருஷ லட்சணம்' என்பதற்காகவல்ல அப்பாவின் நுகத்தடியில் பாரத்தை



இலகுவாக்கவேனும் அவன் ஏதாவது பணிக்குப்போக வேண்டும் என்று மேகா அழுத்தியபோது.... "ஒரு தனியார் போக்குவரத்துக்கழகத்தில் நடத்துநர்களை எடுக்கிறார்களாம் நானும் போய்ச் சேரட்டுமா" என்றான். அப்போது சிவசங்கரன்தான், "கொஞ்சம் பொறுங்க தம்பி... எனக்குத் தெரிந்தவர் ஒருவர்கிட்டே உங்களுக்காக ஏதாவது வேலைக்குக் கேட்டு வைச்சிருந்தேன்.... அவரு கவர்ண்மேண்ட் ஹொஸ்பிட்டல்ல ஆம்புலன்ஸ் டிறைவேலைச் சேர்க்கறாங்களாம்; அவரு போவாரான்னு கேட்டார். பஸ் கண்டருக்கு ஆம்புலன்ஸ் டிறைவிங் எவ்ளோமேல்" எனவும் ராம்குமார் மனம்மாறி அப்பணியில் சேர்ந்து மூன்று மாதங்கள் பயிற்சியும் பெற்றதோடு அதில் நிரந்தமானான். பணியில் சேர்ந்த பின்னால் தன் பாடப்புத்தகங்களை புத்தக விறாக்கையில் உயரத்தில் வைத்துவிட்டவனின் கவனங்கள் கவிதைகள், சிறுகதைப் பயிலரங்கம் என்றிருந்தனவே தவிரத் தன் அரியேர்ஸை நினைத்தானில்லை. இப்போது அவன் தனக்கென வாங்குவதெல்லாம் கவிதையும் நாவல்களுந்தான், பாடப் புத்தகங்களல்ல.

அவனது சம்பளத்தில் தனியாகக் குடும்பவண்டி நகரத்தள்ளாடிய வேளைகளில் எல்லாம் மேகாவும் இளங்கலையோடு கணினியும் கற்றிருந்ததால் தாங்கமாட்டாமல் அவளும், "ஏனுங்க நானும் ஏதாவது வேலைக்குப்போகட்டா...." என்பாள்.

"நான் என்ன வேணான்னா சொன்னேன்... அப்போ குழந்தைகளை யாரு கவனிச்சுப்பா, ஆயா கையில வளர்ற குழந்தைகள் வளர்கையில் அவர்கள் மனநிலை மோசமாய் பாதிக்கப்படுதுன்னு உளவியலாய்வுகள் சொல்லுது" என்று தடுத்துவிட்டான்.

இப்போ பணி எதுவும் இல்லாமல் இருக்கிறபோதும் கவிதை ஆய்வுகளில் இருக்கிற கவனமும் ஈடுபாடும் தனக்கொரு பணி தேடுவதில் இல்லை.

"எப்பிடியுங்க உங்களால இப்படி இருக்கமுடியுது...." என்று கேட்டால், "பாரதிகூட செல்லம்மா பக்கத்து வீடுகளில் அரிசி வாங்கியாந்து சாதம் வடிக்கிற கஷ்டத்தில் இருந்தப்போதான், 'எத்தனைகோடி இன்பம். வைத்தாய் இறைவா' போன்ற தன் உயர்ந்த கவிதைகளை எல்லாம் எழுதினாங்கறது உனக்குத் தெரியுமா" என்றுவிட்டு, "எங்க கஷ்டமெல்லாம் சீக்கிரம் வடிஞ்சுடும் பார்த்துக்கோ" என்று அவளைச் சேர்த்து அணைத்துக் கொஞ்சுவான்.

கொஞ்சினால் போதுமா வயிறு என்று ஒன்றிருக்கில்லை?

அவனைச் சந்தைக்கோ வெறெங்கோ அனுப்பினாலும் பேரம்பேசி வாங்கக்கூடிய சாமர்த்தியமில்லை. மீன்கடைக்கு அனுப்பினால் மீனுக்குத் தலையும் வாலும் இருக்கென்பதைத்தவிர அவனுக்கு வேறெதுவும் அவை பற்றித் தெரியாது, மீன்காரி கச்சல், சாவாளையைக் கொடுத்தாலும் பொத்திக்கொண்டு வாங்கி வந்துவிடுவான்.

வெறும் ரொட்டியையே திரும்பத் திரும்பச் சாப்பிட்டு அலுத்துப்போன கூத்தன், "அம்மா சாதம் வேணும்" என்று அழுகிறபோது, மேகா ஈரல்க்குலை நடுங்கத் துடித்துப்போவாள். மாயாவுக்கான லக்டோஜனும் தீர்ந்து போய் டின்னுள் இன்றைக்கு மட்டுந்தான்போதும் என்றிருந்தபோது மேகாவே பையை எடுத்துக்கொண்டு கடைக்குப்போனாள்.

கடை முதலாளியுடன் ராம்குமார் லட்ச ரூபா சீட்டு ஒன்று பிடித்திருந்தான். சீட்டு இருக்கு என்கிற தென்பில் முன்பு முதலாளி தாராளமாகவே தேவையான பண்டங்களை அவர்கள் கணக்கில் வாரி வழங்கினார். ராம்குமார் வேலை போனபோதுடன் சில வெளிக்கடன்களை அடைக்க வேண்டிச் சீட்டையும் எடுத்துக்கொண்டுவிட்டான். அதனால், இப்போ அவர் கடன் வழங்கச் சற்றே சுணங்கித் தயங்குகிறார்.

மேகா கடைக்குப்போனபோது முதலாளி இருக்கவில்லைத்தான். இருந்தால், நிலுவையை ஞாபகப்படுத்தி லேசாக முனகியிருப்பார். யுவன் அவர்களின் பொருளாதாரநிலையை அறிந்தவன்போல் தாராளமாக அவள் கேட்டபொருட்களான அரிசி, சர்க்கரை, மாவு, லக்டோஜன் டின்கள் எல்லாம் கொடுத்தான். அன்று அவள் வாங்கிய அரிசிப்பையின் அடியில் ஒரு 500 கிராம் பூஸ்ட் போத்தல் ஒன்றும் மேலதிகமாக இருந்தது, அதற்கான கணக்கு கொப்பியில் எழுதப்படவில்லை.

அவளுக்கு அதை ஒளித்து வைக்கவேண்டிய தேவை இருக்கவில்லை. பூஸ்ட் போத்தலைப் பார்த்த ராம்குமார், "நாம குழந்தைகளுக்கு லக்டோஜனுக்கே திண்டாடும்போது பூஸ்ட்டெல்லாம் எதுக்கம்மா...." என்றான்.

"எல்லாம் உங்களுக்காத்தான்.... இப்போதெல்லாம் சரியான போஷாக்கான சாப்பாடு உங்களுக்கில்லை.... இரவெல்லாம் தூக்கத்தில் இருமுறேள்.... அதுதான் கொஞ்சம் சத்தாக இருக்குமேன்னு வாங்கினேன்." ஒரு பொய்யை மனசறிஞ்சு சொன்னாள்.

இவ்வளவு சீக்கிரம் திருமணம் பண்ணிக்கொண்டிருக்க வேண்டாமேயென்றும் திருமணமே பண்ணிக் கொண்டிருக்க வேண்டாமே

என்றெல்லாம் இப்போது நினைக்கும்படி வாழ்வு ஒரு விலங்கைப்போல அவளைப் பொறிவைத்து வீழ்த்திக் கைதியாக்கிவிட்டிருக்கிறது. அப்பா இருந்திருந்தால் ஜீவிதம் இத்தனை கஷ்டமாக இருந்திருக்காது. அவர்தான் நிரந்தரமாய்த் தூங்கிவிட்டாரே.... சிக்கலானவற்றையும் விளங்க முடியாதவற்றையும் பார்த்துச் சிரிப்பதைத் தவிர அவளால் வேறொன்றும் பண்ணமுடிவதில்லை.

முல்லை, முருங்கை, முசுட்டையிலையோ போட்டுப் புளிக்கஞ்சிதான் காய்ச்சிக் கொடுத்தாலும் குடித்துவிட்டுக் ராம்குமார் கவிதை பற்றித்தான் ஆய்வு செய்யுறான். நாளைக்கு அடுப்பில் வைக்க என்ன இருக்குதென்கிற கவலை அவனுக்கில்லை. இவனைக் கையாலாகாதவன் என்பதா, பித்தன் என்பதாஞ். அவளுக்குத் தெரியவில்லை.

அந்த சவுக்கு களஞ்சியம் கடையை நினைத்தாலே தாபம் வழியப் பார்க்கும் அவ் இளைஞனின் ஏக்கப் பார்வைதான் மேகாவுக்கு முதலில் கண்முன்னாடுகிறது. ஒருவன் தாபத்தை, ஏக்கத்தைக் கருவியாய் வைத்து காரியம் சாதிப்பது எவ்வகையில் ஒழுக்கம் தர்மம்.

அடுத்தமுறை அவனைப் பார்க்கும்போது, “இனிமேல் அப்படி எல்லாம் செய்யாதீங்க தம்பி.... அது தர்மமில்லை, ஆபத்தானது, எங்காவது கொண்டுபோய் புதுவம்பில மாட்டிடும்.... அவற்றுக்கான சிட்டையை நீங்கள் போட்டாத்தான் நான் அதை எல்லாம் எடுத்துப்போவேன்” என்றாள் கண்டிப்பான குரலில்.

“இல்லே மாம்.... நான் அது சும்மாவொரு பஷனோ, அபிமானத்தில செஞ்சதுதான், அதை வேறெந்த மாதிரியும் நீங்க அர்த்தப்படுத்திக்கக்கூடாது.” என்றவன் குரலைத் தாழ்த்தி, “மிஸ்டர். ராம்குமாரை நேரமிருக்கறப்போ.... ஒருதடவை தன்னை வந்து பார்க்கச் சொன்னார் மாம்” என்றான்.

வேறெதுக்கு... மளிகைப் பாக்கி 40ஐக் கடந்துவிட்டது, விரைவில் 50ஐ எட்டிவிடும். அதுதான் முதலாளி ராம்குமாரைப் பார்க்க வேணுங்கறார். இருக்கும் இரண்டு சவரன் சங்கிலியை விற்றாலன்றி நிலுவையை அடைக்க முடியாது. பத்து மாசங்கள் முன்னே 28க்கு வாங்கிய டி.வி.எஸ். ஸ்கூட்டியை விற்கமுயன்றால் கூசாமல் 17தான் தரலாமென்கிறார்கள். ஸ்கூட்டியை விற்றுவிட்டால் ராம்குமார் வீட்டுக்குள்ளேயே பம்மிக் கொண்டிருப்பான், வேலைதேட வெளியே போகவே மாட்டான்.

வீட்டுக்கு வந்ததும் முதாலாளி வந்து பார்க்கச் சொன்னதைச் சொன்னாள். “எதுக்கு வரச் சொன்னாராம்” என்றான்.

“ம்ம்ம்ம்ம்ம்... உங்க இலக்கியப் பணிகளைப் பாராட்டி ஒரு விருந்து வைக்கவும் பொற்கிழி வழங்கவும் ஏற்பாடு பண்றாங்களாம்... அது உங்களுக்குச் சம்மதந்தானா என்று விசாரிக்கக் கூப்பிடிறாப்பல...” என்று நொடித்தாள்.

பத்து நாளா அவன் எங்கும் புறப்படவேயில்லை. பம்மிக்கொண்டு வீட்டுக்குள்ளேயே கிடந்தான்.

“ஏங்க.... என்னதான் பிரச்சனையாயிருந்தாலும் அதை நேருக்கு நேர் எதிர்கொள்றவன்தான் மனுஷன். இப்படி கோழை மாதிரி வீட்டுக்குள்ளேயே உட்காந்திருக்கப்படாது. அந்த மனுஷன் அப்பாவின் அறிமுகத்துக்காக பொறுமை காத்திட்டிருக்கார், ஒரு நாள் முற்றத்தில வந்து நின்று சத்தம் போட்டால் யாருடைய மரியாதை போகும்.... அஞ்சு பத்தென்றால் பரவாயில்லை. இப்படி நாப்பது ஐம்பது என்று கடனைத் தந்திட்டு அந்தத் தொகைக்கு வட்டியுமில்லாம முதலுமில்லாம இருக்கிறதுன்னா அவங்க என்ன அத்தனை மாங்கா மடையங்களா....” என்று சத்த ம்போட்டாள். ‘அவனோ அரணையை நாளைக்கு விரட்டினாப் போச்சு’ என்கிற மாதிரி இருந்தான்.

மாயாவின் பிறந்தநாளும் வந்தது, அதற்காகக் கடனேதும் படாமல் வீட்டிலேயே கொஞ்சம் கேசரியும் வடையும் பாயாசமும் பண்ணி அயல்வீட்டுக் குழந்தைகளுடன் எளிமையாகக் கொண்டாடினார்கள்.

தினமும் பாலூத்தும் பால்காரரும் இவனுக்கு வேலைபோன விபரம் தெரிஞ்சி, “ஏம்மா... இப்படி மாசக்கணக்கில் பாக்கி வைச்சீங்கன்னா ஆதிரவுகெட்ட ஏழைகள் நாங்க, புள்ளகுட்டிக்காரங்க எங்கே போவோம் ஊவாவுக்கு” என்று ஒருபாட்டம் முனகிவிட்டுப்போனான். அவள் குழந்தைகளைப் பட்டினி போடாமல் காத்ததில் அவருக்கும் பெரும்பங்குண்டு.

அரிசிக் கிட்டங்கி ஒன்றில் கணக்கெழுத ஆள் தேவையென்று எதிர்வீட்டு பாஷ்யம் ஆசாரி மாமா சொல்லியிருந்தார். “என்ன அரிசியைச் கோணிச்சாக்குகளில் இட்டுக்கட்டி பாரவுந்துகளில ஏத்துற இடமாதலால கொஞ்சம் தூசியாயிருக்கும்மா” என்பதையும் அவரே சொன்னார். தூசி என்பதால் அவளுக்கும் அத்தனை ஆர்வம் வரவில்லை. பின்வாங்கினாள்,

இப்போ மேகாவுக்கு முன்னுள்ள தீர்வுகளாவன.

அரிசிக் கிட்டங்கியில் கணக்கெழுதும் பணியை சுணங்காமல் ஒப்புக்கொள்ளுவது.

ஒரு பொறுப்புள்ள அன்பான ஆயா கிடைக்கும் வரையில் குழந்தைகளை ராம்குமாரே பார்த்துக்கொள்ள நிர்ப்பந்திப்பது.

சங்கிலியை அடைவு வைத்து சவுக்கு களஞ் சியத்தின் பாதிக் கடனை உடனடியாக அடைத்தல். அதை எடுத்துப் பர்ஸில் வைத்துக்கொண்டாள். எளிமையான நூல்ச் சேலையொன்றை எடுத்து இடுப்பு வெளியே தெரியாத மாதிரி பவித்திரமாக உடுத்தினாள்.

“குழந்தைகளைக் கவனமாகப் பாருங்க.... இதோ வந்திடறேன்” என்று ராம்குமாரிடம் சொல்லிவிட்டு ஸ்கூட்டியை உருட்டிக்கொண்டு வீதிக்கு இறங்கினாள் மேகா. லேசாக வெய்யில் ஏறவாரம்பித்திருந்தது. ●

**பொ. கருணாகரமூர்த்தி** <karunah08@yahoo.com>

அ. கதிரவன் ஓவியம்: Vishalandra Dakur

# அவள்

மெல்லிய பனிக்காற்று
நிறமிழந்த எண்ணங்களில்
நிறையத் தொடங்கிய தருணம்
பனித்துளி படர்ந்த புல்வெளி
அவள்
பனித்துளியில் தன்னை மூழ்கடித்துக்கொள்ளத்
தயாரானாள்.
இதயத்தில் பூத்திருந்த
சூரியகாந்தி வாடியிருந்தாலும்
தேகத்தின் நுண்ணிய துவாரங்கள் சிலவற்றில்
இசையும் கவிதையும் மகிழ்வும்
மீதிமிருந்தன.
பனித்துளிகள்
குருதியை நனைத்து
அவளை இசைக்கத் தொடங்கியது.
முத்தமிடும் ஒவ்வொரு பனித்துளியும்
ஒவ்வொரு பியானோகட்டையை எதிரொலிக்கிறது.
புருவத்தில் விழுந்த
**'F'**ஐயும்,
உதட்டில் இணைந்த
**'G'**ஐயும்,
நகங்களை அடைந்த
**'C'**யையும்.
சாப்பின் நிகழ்த்தப்பட்டான்.
ரகசியங்கள் பறிமாற்றப்பட்டன.
பலவாயிரம் ஆண்டுகளாக
மறைக்கப்பட்ட ரகசியங்கள்
பனியினால் தேக்கப்படுகிறது.
ரகசிய சேகரிப்பில் சாப்பினும்
இணைந்துகொள்கிறான்.
பிரபஞ்சம் எதிரொலிக்கப்படுகிறது.
கூந்தலை சற்றுகலைக்கிறாள் –
நட்சத்திரங்கள் உதிர்கின்றன,
பூக்களாக விண்மீன்கள் நனைகின்றன.
சூரியனைக் கம்மலாக சூடிய



அவள்மேல்தான் கருந்துளைகளும் மிதக்கின்றன.
பிரபஞ்ச இருட்டில்
இனம் தெரியாதொரு மூலையில்
அவளை
சாப்பின் வரைகிறான்
ரெம்ப்பிரான்ட் இசைக்கிறான்
பிரபஞ்சத்தில் ஒரு புள்ளியென இருந்தவள்
பிரபஞ்சத்தையே ஒரு புள்ளியில் நிறுத்துகிறாள்.
பிரபஞ்சமும் சுருங்கிவிரிகிறது
அவள் இதயத்துடிப்பாக.
ரகசியங்கள் தீரத்தொடங்குகின்றன.
இசைக்கீற்று மறைகிறது,
பனியின் முணுமுணுப்பும் ஓய்கிறது.
அவள் வீடு திரும்புகிறாள்.
விளைந்தது
ஒரு இடைவெளியும்
சில ரகசியங்களும். ●

# திரைப்படங்களை விடவும் இலக்கியம்தான் வலிமையான கலை வடிவம்!

சர்வதேச திரைப்பட விழாக்களில் அதிகம் கொண்டாடப்பட்ட திரைப்படம், 'The Wild Pear Tree'. துருக்கிய திரைப்படமான இதன் இயக்குனர் நூரி பெல்கெ சைலான். இவர் தனது Once Upon A Time In Anatolia, Winter Sleep உள்ளிட்ட சமீப கால திரைப்படங்களின் மூலமாக, உலகம் முழுக்க தனித்த ரசிகர் குழுவை தனக்கென உருவாக்கி வைத்திருக்கிறார்.

செலான் திரைப்படங்கள் மிக நிதானமான காட்சித் தொகுப்புகளை கொண்டவை. நவீன துருக்கியில் வாழ்ந்துக் கொண்டிருக்கும் மனிதர்களின் புறயுலக இயங்குமுறைகளையும், அகயுலக நெருக்கடிகளையும் தொடர்ச்சியாக பதிவு செய்து வருபவை. துவக்க காலங்களில், தனது குடும்ப உறுப்பினர்களையே நடிகர்களாகவும் திரைப்பட குழுவினராகவும் கொண்டிருந்த சைலான் தனது திரைப்படங்களில் அவல நகைச்சுவையையும் அவ்வப்போது கையாளக் கூடியவர். செக்காவின் புத்தக பிரதிகளில் இருந்துதான் தனது திரைப்படங்களுக்கான உந்துதலை பெறுவதாக சைலான் குறிப்பிடுகிறார்.

The Wild Pear Tree திரைப்படம் பல்வேறு தளங்களில் நிலத்தின் மீது பெரும் நேசம் கொண்டிருக்கும் முந்தைய தலைமுறையை சேர்ந்த தந்தைக்கும், அவரின் அரவணைப்பில் இருந்து விடுபட எத்தனிக்க முயலும் நவீன மனதுடைய மகனுக்குமான முரணையும் நேசத்தையும் உறவு நிலைகளையும் ஆராய்கிறது. மனதில் பெரும் கனமேற்படுத்தும் வகையில் இத்திரைப்படத்தை சைலான் உருவாக்கியிருக்கிறார். நிலவொளியில் பறந்தலையும் பனித் துகள்களும், திரையில் பரவசம்கொண்டு அசைகின்ற மஞ்சள் இலைகளும் படம் முழுக்க நம்மை சூழ்ந்திருக்கின்றன. ஆழமான உணர்வலைகளை கிளர்த்திவிடக்கூடிய வகையில் The Wild Pear Tree உருவாகியிருக்கும்.

நூரி பெல்கெ சைலானிடம் Flux ஊடக குழு மேற்கொண்ட நேர்காணலின் தமிழ் வடிவமிது...

**ஏன் திரைப்படங்களை உங்களது வெளிப்பாட்டுக் கலையாக தேர்வு செய்தீர்கள்? எந்த தருணம் திரைப்படங்களின் திசையில் உங்களை நகரச் செய்தது?**



நான் இப்போதும் இலக்கியமே மிகத் தீவிரமான வலிமைமிக்கதொரு கலை வடிவம் என்று கருதுகிறேன். என்னளவில் திரைப்பட கலையில் ஒரு தஸ்தயேவ்ஸ்கியை உருவாக்குவது சாத்தியமானதல்ல. ஏனெனில், இலக்கியத்தில் வாசிப்பாளனின் கற்பனை திறனும் படைப்பாளனுக்கு நிகராக செயலாற்றுகிறது. ஆனால், திரைப்படம் மிக அசலானதாக இருக்கிறது. பார்வையாளர்களின் கற்பனைத்திறனை குறிப்பிடத்தகுந்த அளவில் திரைப்படம் மழுங்கடிக்கவும் செய்துவிடுகிறது. அதனால்தான் சினிமாவென்பது எளிதில் பொருட்படுத்திக்கொள்ளவியலாத வகையில், பல்வேறு தள அர்த்தங்களைக் கொண்டதாக உருவாக்கப்பட வேண்டும். அல்லது திரைப்பட படைப்பாளியின் அணுகுமுறை மிக ஆழமிக்க உணர்வு நிலைகளில் செயலாற்றுவதாக இருக்க வேண்டும். பார்வையாளனுக்கு நிகரான படைப்பூக்கத்துடன் நம்மால் இயங்க முடியவில்லை என்றால், நிச்சயமாக ஆழ்நிலை உணர்வுகளுக்குள் நம்மால் ஒருபோதும் ஊடுருவ முடியாது.

துவக்கத்தில் நான் ஒரு புகைப்பட கலைஞனாக இருந்ததால், அதன் நீட்சியான திரைப்பட கலைக்குள் நுழையலாம் என்கின்ற எண்ணம் எனக்கு உருவானது. ஆனால், மனிதனின் ஆச்சரியமளிக்கும் வகையிலான பல்வேறு குணவியல்புகளும் என்னை அவை குறித்து விசாரணை செய்ய வேண்டும் என்கின்ற எண்ணத்தை கிளர்த்திவிட்டன. அவற்றை எனது திரைப்படத்தின் பேசுபொருளாகக் கையாள விரும்பினேன் என்று நான் சொல்லவில்லை, ஏனெனில் எனது திரைப்படங்கள் வெற்று விவரணைகள் அல்ல. நான் எனது படைப்பாக்க செயல்பாட்டின் வழியாக உள்ளார்ந்த அர்த்தங்களைத் தேடுகிறேன். பல்வேறு கேள்விகளை எழுப்புகிறேன். அதோடு சில தருணங்களில் மன்னிப்பையும் வேண்டுகிறேன்.

**திரைப்பட கலை தொடர்ந்து பல்வேறு படிப்பினைகளை வழங்கும் என்பது எந்தளவிற்கு உண்மையான கருத்து? அதோடு ஒவ்வொரு திரைப்படமும் உங்களுக்கு தனிப்பட்ட வகையில் ஏதேனுமொன்றை கற்பிக்கிறதா அல்லது உங்களது திரைப்படத்தின் கருத்துருவாக்கம் உங்களுக்குள் ஏதேனும் குறிப்பிட்ட மாற்றங்களை நிகழ்த்தியிருக்கிறதா?**

எனது திரைப்படங்கள் தனிப்பட்ட வகையில் எனக்கு என்னவிதமான விளைவுகளை உண்டுபண்ணுகின்றன என்பது குறித்து எனக்கு தெரியவில்லை. ஆமாம். நான் தொடர்ந்து வளர்ச்சியுற்றபடியே இருக்கின்றேன். இது எனது திரைப்படங்களால் உண்டாகும் மாற்றமா அல்லது வயது மெல்ல மெல்ல ஏறிக்கொண்டிருக்கிறது என்பதால் நேரும் மாற்றமா என்று தெரியவில்லை. எனக்கு தெரியவில்லை. சில மாற்றங்கள் உண்டாகத்தான் செய்கின்றன. சிலவற்றை நான் உணர்ந்திருக்கிறேன் என்றாலும், அவை ஒட்டுமொத்தமான வாழ்க்கை



நிகழ்வுகளால் ஏற்படும் விளைவுகளே தவிர, திரைப்படங்களால் மட்டுமே ஏற்படுவது அல்ல. துரதிர்ஷ்டவசமாக, வாழ்க்கை காலங்களில் அர்த்தம் நிரம்பியதாக உணரப்படுவதில்லை. அவை அர்த்தமற்றவையாகத்தான் எனக்கு தோன்றுகிறது. எனினும், இக்கருத்து எனது ஆன்மாவில் உருக்கொண்டிருக்கிறது. எல்லோருக்கும் இதேவகையிலான உணர்தல்கள் உண்டாக வேண்டுமென்கின்ற அவசியம் எதுவும் இல்லை.

ஒவ்வொருவரும் தங்களுக்கே உரித்தான பிரத்தியேக சாகசங்கள் நிரம்பிய வாழ்க்கையை வாழ்ந்து வருகிறார்கள். எனினும், அவர்களது மனம்தான் இறுதியில் அனைத்தையும் தீர்மானிக்கிறது. இது நமது இயல்பு சார்ந்து ஒவ்வொரு மனிதருக்கும் வேறுபடும் என்று நினைக்கிறேன். ஆனால், எனது முதல் திரைப்படத்தை இயக்கிய ஆரம்ப தினங்களுக்கு மீண்டும் திரும்பும் வாய்ப்பளிக்கப்பட்டால் அதனை நான் ஏற்றுக்கொள்வேனா என்று கேள்வியெழுப்பினால், நிச்சயமாக அதனை விருப்பத்துடன் ஏற்றுக்கொள்வேன். அந்த சூழலை நான் பெரிதும் விரும்புகின்றேன். ஒருவேளை எனது இளம் பருவமும், எனது ஆன்மாவும் அத்தகைய தேர்வுக்கு காரணமாக இருக்கலாம். அக்காலத்தில் நீங்கள் எது செய்துகொண்டிருந்தாலும், அது உங்களது திரைப்பட உருவாக்கத்தின் ஒரு அங்கமாகவே இருக்கும். அப்போதும் இதேவகையிலான நேர்காணல்களும், விமர்சனங்களும், திரைப்பட விழாக்களும் இருந்தன என்றாலும் அப்போது அவை முற்றிலும் புதியதாக புத்துணர்வு அளிக்கக்கூடியதாக இருந்தன. ஒரு குறிப்பிட்ட காலகட்டத்திற்கு பின்னர் இவையெல்லாம் ஒரு தொடர் நிகழ்வு போலவே நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இது கலைக்கு ஆரோக்கியமானதல்ல (சிரிக்கிறார்).

காலமாற்றம் நல்லதொரு அனுபவத்தையும், பல்வேறு புதிய வழிமுறைகளைப் பரிசோதித்து பார்க்கவும், புதிய தளங்களில் செயல்படவும் அதோடு மிக நுணுக்க விவரங்களை ஆராயவும் களம் அமைத்துக் கொடுக்கிறது. என்றாலும், உங்களது கலைச் செயல்பாடு நவீனத்துவ அடையாளங்களைப் பிரதிபலிக்க துவங்கிவிடுகிறது. இதனால், அது சரியான வடிவ நேர்த்தியை அடைந்திருக்கிறதா அல்லது தவறான திசையில் நகர்ந்திருக்கிறதா என்பதை நம்மால் கணிக்க முடியாமல் போகிறது. எனக்கு பல்வேறு சிந்தனைகள் மனதில் உரு திரள்கின்றன என்றாலும், அவற்றின் நம்பகத்தன்மை குறித்த உறுதியை என்னால் வழங்க முடியாது.

**The Wild Pear Tree திரைப்படத்தில், புத்தக கடையில் நடக்கின்ற உரையாடல்களில் கதாப்பாத்திரங்கள் எழுத்து திறனை உடைத்து பேசுவதும், எழுத்தாளரின் அடையாளம் மற்றும் அவரது ஆக்கங்களுடனான உறவு சார்ந்த விவாதங்களும்**



**வலிந்து புகுத்தப்பட்டிருப்பதாக எனக்குத் தோன்றியது. மிகத் தீவிரமான விவாதமொன்றில் பங்கேற்றிருப்பதை போன்ற உணர்வு எனக்குள் உண்டாகியது. இவ்வுணர்வு அந்த உரையாடல்களை மதிப்பீடு செய்யவும் தூண்டுகிறது. அதோடு, அந்தத் தீவிர விவாதங்களின் தொகுப்புகள் ஒருவேளைத் திரைப்படத்தின் மிக முக்கியமான அங்கமாகவும் இருக்கலாம். எனினும், நாடகீய தருணங்களைக் கொண்ட இத்திரைப்படத்தில், கதாப்பாத்திரங்கள் மிக நீண்ட விவரணைகளின் மூலமாக தங்களது எண்ணவோட்டங்களை பகிர்ந்துகொள்கிறார்கள்.**

திரைப்படத்தில் மூல குவிமையம் என்று ஒன்று இருக்க வேண்டும் என்பதில் எனக்கு விருப்பமில்லை. அப்படி நான் அந்த மூல குவிமையம் சார்ந்த ஆய்வுகளில் எனது கவனத்தை குவிக்கின்றேன் என்றால், அந்தத் திரைப்படம் எனக்கு பிடிக்கப் போவதில்லை. ஏனெனில், எல்லோரும் இத்தகைய மூல குவிமையத்தை சார்ந்தே தங்களது எண்ணங்களை வெளிப்படுத்துகிறார்கள். அதனால், அப்படியொரு மைய புள்ளியை நான் தொட்டுவிட்டேன் என்றால், அவ்விடத்திலேயே அந்த திரைப்படம் முடிவடைந்துவிடுகிறது. உண்மையில் ஒரு திரைப்படத்தின் அனைத்துத் தருணங்களுக்கும் இடையிலான இணைப்பு சரடு ஒன்று இருக்கவே செய்கிறது. அந்தச் சரடு திரைப்படத்தை நீங்கள் யதார்த்தமாக அணுகினால் எளிதில் உள்வாங்கிக்கொள்ள முடியும். இந்த திரைப்படத்தில் உரையாடல்கள்தான் அத்தகைய இணைப்பு சரடாக விளங்குகின்றன. இதுவொரு வகையில் பார்வைக்கு எளிதில் புலனாகாத இணைப்பாகத் திரைப்படத்தில் செயலாற்றுகிறது. இந்த திரைப்படத்தின் குவி மையம் அத்தனை வீரியமானதல்ல என்பதை நான் அறிவேன். அதோடு, இத்திரைப்படம் எனது முந்தைய திரைப்படங்களை விடவும் அதிகளவில் நாடகீய தருணங்களால் தொகுக்கப்பட்டிருக்கிறது. இத்தகைய, காட்சித் தொகுப்புகளை உருவாக்குவது என்னளவில் மிகுந்த பரவசமூட்டும் செயல்பாடாக இருந்தது.

**இந்த திரைப்படம் ஒரு இலக்கிய பிரதியைப்போல பல்வேறு அத்தியாயங்களின் தொகுப்பு என்று வரையறுக்கலாமா?**

எனக்கு தெரியவில்லை. சிலர் இந்த திரைப்படம் ஒரு நாவலின் வடிவத்தில் இருப்பதாக எழுதியிருந்தார்கள். ஆனால், இதில் அத்தியாயம் என்பதெல்லாம் அவசியமானதல்ல. அதனால்தான் அவர்களால் இந்த திரைப்படத்தை நாவல்தன்மையில் இருப்பதாக வரையறுக்க முடிந்திருக்கிறது. இக்கூற்று திரைப்படம் அத்தியாயத்தின் தொகுப்புகளால் உருவாக்கப்படுவதால் மட்டுமே கூறப்படுவதல்ல. மாறாக, இலக்கிய பிரதியைப்போல உரையாடல்கள் தெளிவற்றதாய், திரைப்படம் முடிவடைந்ததற்கு பின்பாக பார்வையாளர்களின் மனங்களில் பொருள் துலங்கக்கூடியதாக இருப்பதாலேயே அவர்கள் இவ்வாறு கூறுகின்றனர். எனது திரைப்படம் நாவல்தன்மையில் செறிவுமிக்க பிரதியாக உருவாகியிருக்கலாம். எனினும், ஒரு நாவலென்பது பல்வேறு அத்தியாயங்களை உள்ளடக்கியதாகவோ அல்லது அத்தியாயங்கள் அற்றதாகவோ கூட இருக்க வாய்ப்பிருக்கிறது. இந்த வகையிலான அணுகுமுறை திரைப்படத்தில் பொதுவாக கையாளப்படுவதில்லை. அதனால்தான் என்னால், இத்திரைப்படத்திற்கு ஒரு முன்மாதிரியான படைப்பை உதாரணமாகச்



சொல்ல முடியாமலிருக்கிறது.

**திரைப்பட கலையென்பது இன்னமும் வளர்ச்சியுற்றபடியே இருக்கும் மிக புதிதான கலை என வகைப்படுத்துவதற்கு உங்களது இந்தத் திரைப்படத்தை ஒரு உதாரணமாகச் சொல்லலாமா? திரைப்பட கலையில் இன்னமும் பல்வேறு விதமான சாத்தியங்களை நிகழ்த்த முடியும் அல்லவா?**

நிச்சயமாக. ஒவ்வொரு திரைப்படத்திலும் நான் புதிதாக ஏதாவதொன்றை முயற்சித்துப் பார்க்கிறேன். மிகவும் அபாயகரமான முயற்சியைக் கையில் எடுக்கின்றேன். எந்தவொரு திரைப்படத்திலும் முயன்றிராத புதிய பாணியொன்றைக் கையாள விரும்புகின்றேன். என்னால் பொறுமையுடன் காத்திருக்க முடியவில்லை. இதுபோல என் முன்னால் எழுந்தருளியிருக்கும் சவால் என்னை அடுத்தடுத்து இயங்குவதற்கான உத்வேகத்தை அளிக்கிறது. அதனால்தான் நான் வெளிப்படுத்த விரும்புகின்ற பலவற்றையும் எனது திரைப்படத்தில் சேர்த்திருக்கிறேன். இது திரைப்படமா? இல்லையா? என்பது பற்றியெல்லாம் நான் கவலை கொள்வதில்லை.

**ஒரு திரைப்பட இயக்குநர் தோல்வியுறுதலுக்கான சாத்தியங்கள் குறித்து முன்னதாகவே உணர்ந்திருக்க வேண்டும் என்று கருதுகிறீர்களா?**

ஆமாம். அந்த வகையிலான அச்சவுணர்வுதான் தொடர்ந்து உயிர்ப்புடன் இயங்குவதற்கான உத்வேகத்தை எனக்கு அளிக்கிறது. அந்த அச்சவுணர்வு இருப்பதால்தான் நான் தொடர்ந்து அதிகளவில் உழைத்துக்கொண்டிருக்கிறேன் (சிரிக்கிறார்). அந்த முதிர்ந்த நட்சத்திரத்தை நாம் கைக்கொண்டு கட்டுப்படுத்தியாக வேண்டும். எழுதுகையிலே அல்லது திரைப்படமாக உருவாக்கும்போதே நான் எதைக் குறித்தும் சிந்திப்பதில்லை. அதனால், எனது செயல்பாடு குறித்த திட்டவட்டமான தெளிவு என்னிடத்தில் இருப்பதில்லை. இதுவொரு எரிச்சல் மிகுந்த உணர்வுதான். ஏனெனில், இறுதியில் படத்தொகுப்பு மேசையில் நாம் அமர்ந்திருக்கும்போது நமது செயல்பாட்டில் உள்ள குறைகளை அறிய முடிந்தாலும், நம்மால் எளிதில் பின் திரும்பி அவற்றையெல்லாம் சரி செய்துவிட முடியாது. இதன் காரணமாகத்தான், நான் ஏராளமான காட்சிகளை படம் பிடித்துக்கொள்கிறேன். அதோடு, படமாக்கும்போதே எனக்கு ஒரு காட்சி வெகுவாக பிடித்திருக்கிறது என்றால், நிச்சயமாக அந்த காட்சி இறுதி வடிவத்திற்கு எனக்கு உபயோகமாக இருப்பதில்லை. இதனை நான் உணர்ந்திருக்கிறேன். அதேபோல, உங்களது ஒட்டுமொத்த குழுவினருக்கும் அந்த காட்சிப் பதிவோ அல்லது முழு காட்சியோ பிடித்திருக்கிறது என்றால், நீங்கள் இன்னும் கவனமாக இருக்க வேண்டும்.

ஒரு காட்சி தன்னளவில் ஒட்டுமொத்த திரைப்படத்தில் இருந்தும் தனித்து இயங்குவதாக அர்த்தப்படுத்தப்பட்டு, புரிந்துகொள்ளவும், பிறகு விரும்பவும்படுகிறது என்றால், நிச்சயமாக ஏதேனுமொரு தவறு நிகழ்ந்திருக்கிறது என்று அர்த்தம். ஏனெனில், ஒவ்வொரு காட்சியும் முழு திரைப்படத்தின் அங்கம்தானே தவிர, தனித்த காட்சித் தொகுப்புகளுக்கு எவ்வித அர்த்தமும் இல்லை. அதோடு பொதுவாக, உங்களது படப்பிடிப்பு குழுவினருக்கு ஒரு நடிகரின் வெளிப்பாடு மிகவும் பிடித்திருக்கிறது என்றால், அவர் நிச்சயமாக மிகையாக நடித்துக்கொண்டிருக்கிறார் என்று அர்த்தம். படக்குழுவினர் உண்மையில் உறங்கிவிட வேண்டும் (சிரிக்கிறார்). என்ன திரைப்படத்தை இயக்கிக் கொண்டிருக்கிறார்கள்? என்ன நிகழ்கிறது? என்ற உணர்வு அவர்களிடத்தில் மேலிடும்போதுதான் நான் பாதுகாப்பாக உணருகிறேன். மாறாக, அவர்களுக்கு ஒரு காட்சிப் பதிவு பிடித்துவிடுகிறது என்றால், உடனடியாக நாம் எங்கே தவறிழைத்திருக்கிறோம் என்ற சிந்தனைதான் மனதில் தோன்றுகிறது.

படப்பிடிப்பு காலம் முழுவதும் குழப்பங்கள் நிறைந்ததாகவும், அச்சமூட்டுவதாகவும், அதோடு பல்வேறு குறைபாடுகளுடையதாகவும்தான் நிகழ்ந்துக் கொண்டிருக்கும். படத்தொகுப்பு மேசையில் அனைத்துக் குழப்பங்களுக்கும் ஒரு தீர்வு உண்டாகும். இதனை மிக அதிகமான உறுதியுடன் என்னால் சொல்ல முடியும். ஏனெனில், படத்தொகுப்பின்போதுதான் உங்களுக்கு மிகுதியான காலமும், அமைதியும் வாய்த்திருக்கிறது. அதோடு அக்காலங்களில்தான் நீங்கள் தனிமையில் இருப்பீர்கள். படப்பிடிப்பு காலத்தில் நீங்கள் அனைத்தையும் விரைவாகச் செய்து முடிக்க வேண்டும். உங்களுக்காக நேரம் காத்திருக்காது. பல மனிதர்கள் உங்களைச் சூழ்ந்திருப்பார்கள். ஒரு திரைப்படம் இயக்குநர் எப்போதும் மிக குறைவான எண்ணிக்கையிலான மனிதர்களையே தனது குழுவில் இணைத்திருக்க வேண்டும். குறைவான மனிதர்களும், போதிய காலமுமே எப்போதும் ஒரு


The Wild Pear Tree

திரைப்பட படைப்பாளிக்கு அவசியமானது. எனது துவக்க கால திரைப்படங்களின்போது மொத்தமாக இரண்டே இரண்டு நபர்கள்தான் எங்களது குழுவில் இருப்பார்கள். அதனால், எங்களிடம் மிகுதியான காலம் இருந்தது. இப்போது அத்தகைய சுதந்திரத்தை நான் இழந்திருப்பதான எண்ணம் பலமுறை எனக்குள் எழுந்திருக்கிறது.

**கதை சொல்லுதலின் கூறுகளில் ஒன்று, சமரசங்களை ஏற்றுக்கொள்வது. காலம் ஒரு திரைப்படத்தை சீரான வடிவத்தை எட்டுவதற்குக் கைக்கொடுக்கிறது என்பதை நீங்கள் நம்புகிறீர்களா? அல்லது சிற்சில சமரசங்களை நாம் செய்வது சரியானதுதானா?**

படப்பிடிப்பு தளத்தில் நமக்கு போதிய அவகாசம் இல்லாததால், நான் அனைத்தையும் நம்பிக்கையற்ற வகையிலேயே அணுகுகிறேன். இதனால்தான், படத்தொகுப்பு செய்யும்போது எனக்கு அதிகளவில் தேர்வுகள் இருக்க வேண்டுமென்பதற்காக நிறையக் காட்சிகளை பதிவு செய்துகொள்கிறேன். ஒரு குறிப்பிட்ட உளவியல்தன்மையுடன் காட்சிகளை அணுகும்போது, ஒரேயொரு சதவீத சந்தேகம் என்னில் உண்டாகுமானல்கூட, நான் உடனடியாக வெவ்வேறு தளத்துக்கு தாவி விடுவேன். வேறு சில உளவியல் அல்லது உணர்வு சார்ந்து இயங்கத் துவங்கிவிடுவேன். சமயத்தில் முற்றிலும் எதிர்மறையான உளவியல்தன்மைகளுடன் செயல்படத் துவங்கிவிடுவதும் உண்டு. இது உண்மையிலேயே பலமுறை கைக்கொடுத்திருக்கிறது. என்னால் இதனைத் திட்டவட்டமாக வரையறை செய்ய முடியாது. படப்பிடிப்பு தருணத்தில் ஒரு கதாப்பாத்திரம் அழ வேண்டும் என்றோ அல்லது மிக உருக்கமான முக பாவனைகளை வெளிப்படுத்த வேண்டும் என்றோ நமக்கு தோன்றுகிறது. ஆனால், படத்தொகுப்பின்போது காட்சிப் பதிவை பார்க்கும்போது அதற்கு நேரெதிராக அந்த கதாப்பாத்திரம் சிரித்துக்கொண்டிருக்கும். அதனால், நான் ரொம்பவும் நம்பிக்கையற்றத்தன்மையில்தான் படப்பிடிப்பு தளத்தில் இயங்குகிறேன். நான் நிறைய காட்சிகளை பதிவு செய்துகொள்கிறேன். சமயத்தில் ஒரு காட்சிப் பதிவுக்கு தேவையான வெவ்வேறு உணர்வு நிலைகளைப் பதிவாக்கிக்கொள்கிறேன். முற்றிலும் முரணான உணர்வுகளைப் பதிவு செய்துகொள்வதும் உண்டு. ஆனால், இறுதியில் படத்தொகுப்பு பணியின்போது, அந்த தருணத்தில் அந்த கதாப்பாத்திரம் வெளிப்படுத்த வேண்டிய சரியான உணர்வு என்ன என்பதை உணர்ந்து, திரைப்படத்தின் உளவியல் பிணைப்புக்கு ஏற்ற வகையில், சரியான பாவனைகளை தெரிவுசெய்து, பின்னர் அதனை படத்தில் இணைப்பேன். எனக்கு இத்தகைய திரைப்படத்துடன் உளவியல்ரீதியிலான பிணைப்புதான் தேவையாய் இருக்கிறதே தவிர, கதையை ஒருபோதும் நான் பொருட்படுத்துவதில்லை.

ஒவ்வொரு கணத்திலும், மனித இயல்பு நேர்மையாகச் செயலாற்றுகிறதா என்பதுதான் எனக்கு முக்கியமானதாக இருக்கிறது. திரைப்படத்தில் சேர்க்கப்படுகின்ற நுணுக்க விபரங்கள் மனித இயல்பைப் பற்றியும், அதன் உண்மைத்தன்மை பற்றியும் எனக்கு நிறையப் போதிக்கின்றன. வாழ்க்கையிலும் ஒரு மனிதரை ஒரேயொரு நிமிட நேரத்தில் பார்க்கும் சந்தர்ப்பம் நமக்கு உண்டானால்கூட நம்மால் அவரிடமிருந்து நிறையக் கற்றுக்கொள்ள முடியும். அவர்கள் பேசும் விதம் மற்றும் அவரது உடல்மொழி ஆகியவற்றை வைத்து நம்மால் நிறைய விஷயங்களை அறிந்துகொள்ள முடியும். அதனால், நுணுக்கங்கள், அறவுணர்வு சமயங்களில் உள் பொதிந்திருக்கும் உண்மை நிலை



Once Upon A Time In Anatolia



Winter Sleep

இவைகளைதான் நான் ஆராய விரும்புகின்றேன். அதனால் சுவாரஸ்யம் மிகுந்த கதை குறித்து எனக்குத் துளியும் ஈடுபாடு இல்லை. ஏனெனில், ஒரு சுவாரஸ்யமான கதை உருவாகியிருக்கிறது என்றால், நடிகர்களும், அவர்களது உணர்வுகளும், மற்ற அனைத்துக் கூறுகளும் அந்த கதைக்கு சேவகம் புரிய துவங்கிவிடுகின்றன. அதனால், ஒரு திரைப்படத்தின் உள்ளிருக்கின்ற கதையின் சேவகனாக செயலாற்றுகின்ற போக்கில் எனக்கு உடன்பாடு இல்லை.

**கதை விவரிப்பு பாணியென்பது திரைப்பட உருவாக்கத்தில் செய்யப்பட வேண்டிய அணுகுமுறை. ஆனால், நீங்கள் அதனைப் படத்தொகுப்பு மேசையில்தான் செய்வதாக குறிப்பிட்டிருக்கிறீர்கள். இதன்மூலமாக, படப்பிடிப்பு தளத்தில் முடிவெடுக்க வேண்டிய பொறுப்புகளை நீங்கள் காலம் தாழ்த்துவதாக அல்லது உதாசீனப்படுத்துவதாக அர்த்தமாகிறதே?**

படப்பிடிப்பு தளத்தில் நான் அதிகளவில் முடிவுகளைத் தீர்மானிப்பதில்லை. மாற்று வழிமுறைகளை பற்றிதான் சிந்தித்துக்கொண்டிருப்பேன். உண்மையில் படத்தொகுப்பின்போதுதான் ஏராளமான முடிவுகளை தீர்மானிக்க வேண்டியிருக்கிறது. அந்த தருணத்தில் முடிவெடுக்கும் சாத்தியங்கள் இல்லாது போகுமானால், ஒருவேளை படப்பிடிப்பு தளத்தில் அத்தகைய தீர்மானங்களை செய்ய வேண்டியிருக்கலாம் (சிரிக்கிறார்). எனக்கு ஒரு தெளிவான தோற்றத்தை கட்டியெழுப்புவதை விடவும், தெளிவற்றதான சூழலை கட்டமைப்பதுதான் பிடித்திருக்கிறது. திரைப்படங்களை மட்டுமல்லாது வாழ்க்கையையும் அவ்வகையில்தான் நான் அணுக விரும்புகின்றேன். இது ஒரு குறிப்பிட்ட சூழலை பல்வேறு வகையில் குறுக்கீடு நிகழ்த்துவதற்கான சாத்தியங்களை அளிக்கிறது. வாழ்க்கையில் எதுவொன்றும் ஒருவிதமாக நடைபெறுவதில்லை. எந்தவொரு மனிதரையும் நல்லவர் அல்லது தீயவர் என்று முத்திரையிட முடியாது. குறிப்பிட்ட சூழலில் சிலருக்கு ஒருவர் நல்லவராகவும், மற்ற சிலருக்கு கிறுக்குத்தனங்கள் நிரம்பியவராகவும் தோன்ற வாய்ப்பிருக்கிறது. நாம் எல்லோரும் இவ்வகையில்தான் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். அதனால், என்ன நிகழ்கிறது என்பதை பற்றிய திட்டவட்டமான முடிவுகளை மேற்கொள்வது சரியானதல்ல. அதேபோல ஒரு மனிதரின் குணவியல்புகளை அலசுவதும் முறையானதல்ல. ஏனெனில், அந்த மனிதர் வேறொரு சந்தர்ப்பத்தில் முற்றிலும் வேறுபட்டவராகச் செயல்படக்கூடும். அதனால், நான் ஒரு தெளிவான முடிவுகளை நோக்கி நகர விரும்பவில்லை. எனக்கு ஒரு மனிதரை இவ்வகையில் திட்டவட்டமான வரையறைக்குள் திணிப்பதில் உடன்பாடில்லை. வாழ்க்கை ரொம்பவும் சிக்கலானது. அதனால், எனது பணியென்பது வாழ்வின் பின்னல்களையும், சிக்கல்களையும், பல்வேறு பரிமாணங்களில் திரைப்படங்களில் வெளிப்படுத்துவது மட்டும்தான். இது இலகுவான பணி அல்ல. திரைப்பட தொழிற்கூடமும், மக்களும் அதனை விரும்புவதில்லை. அவர்கள் எப்போதும் திட்டவட்டமான முடிவுகளைத்தான் விரும்புகிறார்கள். ஆனால், நான் என்ன செய்வது? எனக்கு இந்த வகையில் இயங்குவதுதான் மனநிறைவளிக்கிறது. ●

**ராம் முரளி** <raammurali@gmail.com>

# தேவதேவன் கவிதைகள்

## 22. முகம்

இரவு நேர –
ஓடும் ரயிலில் இருந்துகொண்டு
இந்தப் பெண்
அதன் நிற்கும் நிலையம்
எப்படி அறிந்தாள்?

காற்றில் கலைந்து பரபரக்கும்
கூந்தலைப் போலில்லாது
அப்படி ஒரு அமைதியிலிருந்தது முகம்!



கண்ணாடி முன் நின்றுகொண்டு
தன் கூந்தலைச் சரிசெய்ய வந்தவள்
தன் முகத்தைத்தான் முதலில் பார்த்தாள்.
கண்கள் முதலில் பார்க்க விழைவது
முகத்தைத்தான் என்பதை எப்படி அறிந்தாள்?
தன் முகத்தைப் பார்த்துக்கொண்டேதான்
பரபரக்கும் கூந்தலைக் கட்டுக்குள் அடக்குகிறாள்.
நல்ல பெண்தான்.
அதனால்தான் இவ்வளவு அழகாயிருக்கிறாள்.

## 23. வெங்காயம்

அப்புறம் அப்புறம் என்றில்லாமல்
நாளை என்றில்லாமல்
ஒவ்வொரு வரியிலுமல்லவா
இருக்கிறது கவிதை!

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



விலை ரூ.120/-




விலை ரூ.100/-




விலை ரூ.100/-




விலை ரூ.100/-




விலை ரூ.150/-




விலை ரூ.120/-




விலை ரூ.200/-

**அம்ருதா பதிப்பகம்**

அம்ருதா, 1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு,
மூன்றாவது பிரதான சாலை,
சி.ஐ.டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035.
அலைபேசி: 94440 70000

# இயேசு கிறிஸ்துக்கு இறுதிச் சோதனை!

**நிகோஸ் கசாண்ட்ஸாகீசின் 'தி லாஸ்ட் டெம்ப்டேஷன் ஆ:ப் கிறைஸ்ட்'**

## நிகோஸ் கசாண்ட்ஸாகீஸ்

இவர் 1883இல் ஹெரக்லியானில் பிறந்தார். அப்போது அங்கு துருக்கியர்களின் ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. இவரது தந்தை ஒரு குடியானவர். க்ரீட் மக்கள் உணர்வு பூர்வமானவர்கள். ஐரோப்பிய நாகரிகம் தாக்கம் செலுத்தாத சில பூர்வீக பண்பாடுகள் இன்னமும் அங்கு நிலவி வருகிறது. 1897இல் துருக்கியர்களுக்கு எதிராகக் கலகம் மூண்ட போது கசாண்ட்ஸாகீசின் குடும்பம் நாக்சோஸ் என்ற தீவுக்குக் குடிபெயர்ந்தது. இவர் சட்டம் பயின்று அதில் பட்டம் வென்றார். இவரது வாழ்க்கை பெரும்பாலும் கிறித்துவச் சிந்தனையாளர்களால் உருவாக்கம் பெற்றது. ஆனால், இவரோ ஜெர்மானிய தத்துவ ஞானி அல்லது எதிர்த் தத்துவ ஞானி நீட்ஷேவின் சிந்தனைகளால் அதிகம் தூண்டப்பட்டார்.

மனிதன் தன் முயற்சியினால் கடவுளின் துணையின்றியே அதிமனிதன் நிலைக்கு உயர்வு பெற முடியும் என்று நம்பினார் கசாண்ட்ஸாகீஸ். சமய நம்பிக்கைகள் கொடுக்கும் அதீதப் பாதுகாப்பைக் கேள்விக்குட்படுத்தினால் மட்டுமே வாழ்வை நேசிக்க முடியும் என்ற நீட்ஷேயிய வாழ்வியல் கோட்பாடு 'டயனீசிய சூனியவாதம்' (Dionysian Nihilisim). தன்னுடைய 20ஆவது வயதைக் கடந்த காலகட்டத்தில் இவர் கம்யூனிசச் சிந்தனைகளுக்குத் தாவினார். அப்போது ரஷ்யாவுக்கு 3 முறை பயணம் மேற்கொண்டார். ஆனால், கடினமான கேள்விகளுக்கும் சூழ்நிலைகளுக்கும் எளிமையான விடைகளை வழங்கும் ஒழுங்கமைப்பை இந்த நீட்ஷேயியவாதியினால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. முதலாம் உலகப்போர் சமயத்தில் கிரேக்க அமைச்சகத்தில் தலைமை இயக்குநராகப் பணியாற்றியிருக்கிறார். முதல் திருமணம் 12 ஆண்டுகளுக்குப் பின் முறிந்து 2ஆவது திருமணம் நடந்தது.



கசாண்ட்ஸாகீஸின் இப்போதைய புகழ், அவர் தன் கடைசி 11 ஆண்டுகளில் எழுதிய படைப்புகளின் தீவிரத்தன்மையினால் விளைந்ததே. இந்த ஆண்டுகளில்தான் அவர், "சோர்பா தி கிரீக்', 'தி கிரீக் பாஷன்' (Passion), 'ஃப்ரீடம் ஆர் டெத்', 'தி லாஸ்ட் டெம்ப்டேஷன் ஆஃப் கிறைஸ்ட்', 'தி புவர் மேன் ஆஃப் காட்', 'ரிப்போர்ட் டு கிரீகோ' போன்ற படைப்புகளை எழுதினார். இவரது படைப்புகள் உலக மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன, திரைப்படங்களாகவும் வெளிவந்துள்ளன. 1952ஆம் ஆண்டு ஒரு வாக்கில் நோபல் பரிசை தவறவிட்டார். 1957ஆம் ஆண்டு சீனப் பயணத்தின் போது உடல் நிலை மோசமடைந்தது. பிறகு அதே ஆண்டு ஜெர்மனியில் ஓர் மருத்துவமனையில் இவர் உயிர் பிரிந்தது.

## கதை அமைப்பு

'யேசு கிறிஸ்துவுக்கு இறுதிச் சோதனை' என்ற இந்த நாவலில் ஏசுவின் வாழ்வு புனைவு ரீதியாக வடிவமைக்கப்பட்டு சித்தரிக்கப்பட்டுள்ளது. 33 பகுதிகள் கொண்ட இந்த நாவல் கிறிஸ்துவின் 33 வருடங்களைக் குறிப்பதாக அமைக்கப்பட்டுள்ளது. கிறிஸ்துவிற்கு 30 வயதாக இருக்கும் போது இந்த நாவல் தொடங்குகிறது. அப்போது ஏசு ஒரு கிராமத் தச்சர். ஆனால், தான் மற்றவர்களைப் போல் அல்ல, வேறுபட்டவர் என்பது அவருக்குக் குறிப்பால் தெரிந்தது. சிறுபிராயம் முதலே கடவுளின் விரல்கள் தன் மேல் இருப்பதான உணர்வு அவருக்கு இருந்தது.

இது உருவகமாகவோ கற்பனையாகவோ அல்ல, நிஜமாகவே தலையின் மேல் கடவுளின் நகங்களைத் தொட்டு உணர முடிந்துள்ளதை ஏசு உணர்கிறார். இதனால் பாவ காரியம் செய்தால் கடவுள் தன்னை தனிமரமாக்கி விடுவார் என்று நம்பத் தொடங்குகிறார். அதனால்தான், ரோமப் பேரரசின் அதிகாரிகள் ஒரு யூதனைப் பிடித்து அவரைத் துரோகி என்று குற்றம்சாட்டி தண்டனை அளிக்கும் போது, ஏசு, சிலுவை ஒன்றை தயாரித்துத் தந்து அதனை தண்டனை வழங்கப்படும் இடத்திற்கும் கொண்டு செல்கிறார். அந்த யூதனின் தாய் மகனை பறிகொடுக்கும் வேதனையில் கிறிஸ்துவைச் சபிக்கிறார். அதாவது கிறிஸ்துவும் சிலுவையில்தான் அறையப்படுவார் என்று அந்தத் தாய் சபிக்கிறார்.

இந்தச் சாபம் கிறிஸ்துவைக் கடைசி வரை தொடர்கிறது. மேரி மக்தலேனா என்ற கிராம ராபி மதத்தைச் சேர்ந்த ஒரு பெண், ஏசுவை அவரின் 3 வயதிலிருந்தே காதலிக்கிறாள். இருவரும் சேர்ந்து அப்பாவித்தனமாக, அறியாக் காம விளையாட்டுகளை விளையாடுகின்றனர். 20 வயது நிரம்பிய கிறிஸ்து மக்தலேனை மணக்க விரும்புகிறார். ஆனால், அவர் சிறுபிராயம் முதலே தன் தலையில் தொட்டு உணர முடியக் கூடிய கடவுளின் விரல்கள் அவரை திருமணத்திலிருந்து விலக்கி அழைத்துச் செல்கிறது. இதனால், ஆத்திரமும் கோபமும்



அடைந்த மேரி மக்தலேன் வரம்பு மீறிய பாலியல் உறவுகளில் ஈடுபடுவதான ஒரு வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்துக்கொள்கிறாள். மக்தலேனாவின் இந்த முடிவு ஏசுவுக்கு மனவியாகூலத்தை அளிக்கிறது. இதனால் காட்டில் இருக்கும் ஒரு துறவி மடத்துக்குச் செல்கிறார் ஏசு.

அங்கு யேசு சில நாட்கள் வசிக்கிறார். இந்த நாவலில் திருப்புமுனையாக அமையும் கிறிஸ்துவின் 2 முக்கிய சந்திப்புகள் இங்குதான் நடைபெறுகிறது. முதல் சந்திப்பு மக்தலேனாவின் தந்தை சைமன். இந்த வயதான ராபி, பொறுமையின்றி இஸ்ரேலை விடுவிக்கும் மீட்பரை நீண்ட காலமாக எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறார். ஏசு கிறிஸ்துதான் அந்த மீட்பர் என்பது அவருக்குத் தெரிந்திருந்தது. ஆனால், ஏசு கிறிஸ்துவோ தன் ஆன்மாவின் துயரங்களைக் கூறி இவரிடம் பாவமன்னிப்புக் கேட்கிறார்.

2ஆவது சந்திப்பு ஜூடாஸ் இஸ்காரியோ. இவன் ஒரு மதவெறியன். இவன் நம்பிக்கைக் கொண்டுள்ள ஒரு தீவிர அமைப்பினால் கிறிஸ்துவைக் கொல்ல பணிக்கப்பட்டவன். ஏனெனில், இந்த அமைப்பின் தலைவனை சிலுவையில் அறைந்ததில் கிறிஸ்துவின் பங்களிப்பு இருப்பதாக இவன் நம்பினான். ஆனால், ஏசு கிறிஸ்து இவன் கூறிய குற்றச்சாட்டை மறுக்கவில்லை, இதனையடுத்து இஸ்காரியோ தன் ஆயுதத்தைக் கீழே போடுகிறான். இருந்தாலும் கிறிஸ்துவை கண்காணிக்க முடிவெடுக்கிறான். ஏசு என்றாவது ரோமப்பேரரசின் உளவாளியாக மாறினார் என்றால், அப்போது அவரை கொலை செய்வோம் என்று தீர்மானிக்கிறான்.

இந்நாவலின் மையப்பகுதிகள் பைபிளின் சுவிசேஷ நற்செய்திகளைப் பற்றியதாக அமைந்துள்ளது. அதாவது ஞானஸ்நானம், புலனின்ப வாழ்வின் சபலங்கள், சீடர்களின் அழைப்பு, உருவகக் கதைகள், பூரண குணம் பற்றிய பைபிளின் செய்திகள், விபச்சாரத்தில் வீழ்ந்த பெண்கள் பற்றிய பைபிளின் பார்வை ஆகியவை விவாதிக்கப்படுகின்றன.

இதில் மிக முக்கியப் பகுதியான ஜான் என்ற பேப்டிஸ்ட்டை கிறிஸ்து சந்திப்பதை ஏசு திருப்பணியின் மையப்பகுதியில் வைத்துள்ளார். அதுவரை ஏசு அமைதி, அன்பைப் போதித்து வந்தார். இதன் பிறகு பழைய அமைப்பை உடைத்து புதியதை நிர்மாணிக்க வேண்டிய கட்டாயம் குறித்து திட நம்பிக்கைகொள்கிறார். இதனால் மகிழ்ச்சியடைந்த ஜூடாஸ் இஸ்காரியோ கிறிஸ்துவின் நம்பிக்கைக்குரிய தோழனாகிறான்.

ஏசுவும் அவரது சீடர்களும் குடியானவர்களிடமிருந்து தங்கள் கவனத்தை எதிரியின் மையமான ஜெருசலேம் அதிகாரப் பீடத்தை நோக்கித் திருப்புகிறார்கள். இஸ்ரேலியர்கள் தாங்கள் எகிப்தியரிடமிருந்து பெற்ற விடுதலையைக் கொண்டாடும் சமயத் திருவிழா கொண்டாட்டங்கள் நெருங்கிக் கொண்டிருந்த வேளையில் சம்பவங்கள் அதன் தவிர்க்கவியலா உச்சக்கட்ட காட்சியை வந்தடைகிறது.

தீர்க்கதரிசி இசய்யாவின் போதனைகளின் படி கடவுளின் அரசாட்சி தோற்றம் பெற வேண்டுமெனில், மானுடபுத்திரன் (Son of Man), தன் உயிரை மாய்த்துக்கொள்ள வேண்டும் என்ற இருண்ட, கடினமான ரகசியத்தை ஏசு தன் நண்பன் ஜூடாஸ் இஸ்காரியோவிடம் தெரிவிக்கிறார். மேலும், தன் நண்பனும், சீடர்களிலேயே பலம் பொருந்தியவனுமான ஜூடாஸிற்கு தன்னைக் கைது செய்ய ஏற்பாடு செய்யுமாறு உத்தரவிடுகிறார். ஜூடாஸ் வாக்குவாதத்துடனும் தயக்கத்துடனும் சம்மதிக்க, ஏசுவை சிலுவையில் அறையும் நிகழ்வு மெதுவாக முன்னேறுகிறது.




இந்த நாவலிலேயே கடைசி 3 பகுதிகளை சிறப்பான பகுதிகளாகக் குறிப்பிடலாம். கிறிஸ்துவின் வாழ்க்கையாக கசாண்ட்ஸாகீஸ் உருவாக்கிய கற்பனைப் பகுதிகளை இவரது இலக்கிய மேதமைக்கான உதாரணமாகக் காட்டலாம். கிறிஸ்து சிலுவையில் தொங்கும்போது தனது கடைசி வார்த்தையைக் கூறிவிட்டு ஒ ரு சில விநாடிகளேனும் மயக்கத்தில் ஆழ்கிறார் அப்போது அவருக்கு ஒரு தரிசனக் காட்சி விரிகிறது. இதுதான் அவரது கடைசி ஆசை என்றுகூட எடுத்துக் கொள்ளுமாறு கசாண்ட்ஸாகீசின் சித்தரிப்பு அமைகிறது.

அந்த தரிசனக் காட்சி இதுதான்: 'அதாவது, ஒரு வசந்த காலம், அவர் மரணமடையவில்லை, மேரி மக்தலேனாவை மணந்துகொள்கிறார். இருவரும் சந்தித்து தங்கள் காதலைப் பூர்த்தி செய்துகொள்கின்றனர். ஏசு தன்னை இப்போதுதான் மனிதன் என்று உணர்கிறார். இப்பொது கிறிஸ்துவுக்கு கேள்விகள் இல்லை. இறுதியில் கடவுள் அன்பையே நேசிக்கிறார், வாழ்க்கையை நேசிக்க உந்துசக்தியாக இருக்கிறார் என்பதையும் துன்பம், வெறி, மரணம் போன்றவை கடவுளின் சங்கல்பமில்லை என்றும் உணரத் தொடங்குகிறார். காலம் செல்கிறது, மக்தலேனா இறக்கவே ஏசு இன்னொரு திருமணம் செய்துகொள்கிறார். அவளது தங்கையையும் மணந்துகொள்கிறார். மூவரும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்குகின்றனர். வீடு குழந்தைகளால் நிறைகிறது, பேரக்குழந்தைகளுடன் ஏசு விளையாடுகிறார்.

ஏசு தன் முந்தைய சீடர்களைச் சந்திக்கிறார், ஆனால், அவர்கள் யேசுவை ஒருவர் மாற்றி ஒருவர் குற்றம்சாட்டுகின்றனர். அவர்களின் குரல்கள் காற்றில் மெதுவாகக் கரைகிறது. யேசு மெதுவாக தன்னுணர்வு கொள்கிறார், சிலுவையில் அறையப்பட்ட நிலையில் தனியாக இருக்கிறார். இதை அறிந்தவுடன் அவர் மனம் மகிழ்ச்சிக்கொள்கிறது. அதாவது தான் உலகியல் வாழ்க்கைக்குத் திரும்பிவிடவில்லை என்றும் கடைசி வரை விசுவாசியாகவே இருப்பதைக் கண்டு மகிழ்ச்சி கொள்கிறார், அதாவது சாதாரண மனிதனின் உலகியல் சபலங்களுக்கு, சோதனைகளுக்குத் தான் ஆட்படவில்லை என..

## முடிவாக ஒரு கருத்துமையமாக்கம்

யேசுவைப் பற்றிய இந்தச் சித்தரிப்பு கடும் விமர்சனங்களை எதிர்கொண்டது, ஏனெனில், கசாண்ட்ஸாகீஸ் ஒரு கிரேக்கர் என்பதால் கிரேக்க துன்பியல் மரபில் வைத்து யேசுவை ஒரு துன்பியல் நாயகனாக (Tragic Hero) அவர் கற்பனை செய்துள்ளார். அதாவது அரிஸ்டாட்டிலின் கொள்கையின் படி நாயகன் எந்த வித தவறும் தீங்கும் செய்யாத போது அவனுக்கு சொல்லொணா உடல், மன வேதனைகள் ஏற்படுகிறது, அவன் இந்தத் துன்பத்துக்கும், வாதைக்கும் உரியவனல்ல என்ற நிலையில் ஒருவருக்கு ஏற்படும் துன்பமும் வாதையும் அந்த நாயகன் மீது பார்வையாளர்களுக்கு இரக்கத்தையும் கருணையையும் (ஜீவீமீஹ்) ஏற்படுத்துவதோடு, இதேபோன்ற ஒன்று தங்களுக்கு நிகழ்ந்தால், தங்கள் மேல் இத்தகைய துயரம் வந்து விழுந்தால், என்ன ஆகும்? என்று பார்வையாளர்கள் அச்சம்கொள்வதுமான இரட்டை உணர்வை தோற்றுவிப்பதுதான் துன்பியல் என்கிறார்.

அதாவது கட்டுக்குள் இருக்கும் பார்வையாளனின் அடக்கப்பட்ட உணர்ச்சிகள் பெருகி வெளிவர வேண்டும். யேசுவை கிரேக்க துன்பியல் நாடக மரபில் வைத்து அவரை ஒரு துன்பியல் நாயகனாக இவர் சித்தரித்திருப்பது யூத-கிறித்துவ மரபு விளக்கங்களுக்கு எதிரானது. காரணம் யூத-கிறித்துவ மரபில் 'உயிர்த்தியாகம்', அர்ப்பணிப்பு என்பது ஓர் மிக முக்கியமான அங்கமாகும். மேலும், இயேசு என்பவர் கடவுளின் புத்திரன், மானுடப்புத்திரன் அல்ல. யேசு என்பவர் பிதா, சுதன், பரிசுத்த ஆவி என்ற மூன்றன் ஐக்கியம், ஒன்றில் மூன்று ஐக்கியமாகும் ஓர் தருணம், இங்கு தியாகம் என்பதே திருப்பணி.

யேசுவுக்கு திருப்பணியும் தரிசனமும் ஒன்றுதான் (Mission and Vision are one for Jesus). கிரேக்க மானுடவாதம், நீட்ஷேயியம் இரண்டும் கொடுக்கப்பட்டதை அனுபவி, ஏற்றுக்கொண்டு அதை நேசி. விதியை நேசித்தல் என்ற வகைச் சிந்தனை, எதனை எதிர்த்தும் போர் செய்யாதே, உயிர்போகும் வேதனையாயினும் பேரிழப்பாயினும் தேவையானவை, நாம் அதை விரும்புகிறோமோ இல்லையோ அது தேவையானது



என்ற கருதுகோள்களைக் கொண்டது, ஆனால், யூத-கிறித்துவ மரபு, அன்பு, நேயம், சேவை, தியாகம், அர்ப்பணிப்பு என்பதை அடிப்படையாகக் கொண்டது.

துன்பியல் மானுடவாதப் பார்வை சமயச் சார்பற்ற மனிதநேயவாதப் பார்வையில்தான் சாத்தியம். சமயம் சார்ந்த மானுடவாதப் பார்வையில் குறிப்பாக கிறித்துவத்தில் கிரேக்க, நீட்ஷேயிய பாணி துன்பியல் பார்வை சாத்தியமேயில்லை. இதில் Tragi-Comedy மானுடவாதப்பார்வையே சாத்தியம், மீட்பு, மன்னிப்பு, ரட்சிப்பு, அருள் இதில் முக்கியமானது.

ஆகவே, கஸாண்ட்சாகீஸ் கிரேக்க மரபில் வைத்து இயேசுவைப் பார்ப்பது குறைபடு பார்வையே.

கிரேக்க - ரோமானிய மரபில் கடவுளுக்கும் மனிதனுக்கும் சதா போர்தான். தவறு செய்பவர்களுக்கு தண்டனை உறுதி, கடும் தண்டனைகளை அனுபவித்தாக வேண்டும், இல்லையேல் தெய்வங்களுக்கு சாந்தி செய்து பரிகாரம் செய்யும் போக்கு உண்டு. கிரேக்க-ரோமானிய கடவுளர்கள் பழிவாங்கும், தண்டிக்கும் உக்கிரமான கடவுளர்கள். ஆனால், யூத-கிறித்துவ மரபில் தண்டிக்கும் அதிகாரமும், மன்னிக்கும் அதிகாரமும் கடவுளுக்கே உண்டு. மனிதன் தண்டிக்க முடியாது. மன்னிப்பு அனைவருக்கும் உண்டு, இதில்பிறப்பால் தகுதி நிலைகள் கிடையாது.

கிரேக்க-ரோமானிய மரபில் நாயக மரணம் துன்பியலாகப் பார்க்கப்படுகிறது, ஆனால், யூத-கிறித்துவ மரபில் அவ்வாறு கிடையாது. மானுடகுலத்துக்காக, கடவுளுக்காக, உலக நன்மைக்காக செய்யும் தியாகமாகப் பார்க்கப்பட்டு, அவர்கள் தியாகியாகவே உயர்வு பெறுகிறார்கள், இது அடிப்படை வித்தியாசம். ஆகவே, கசாண்ட்சாகீஸ் கிறிஸ்துவை கிரேக்க-ரோமானிய மானுடவாத-துன்பியல்வாத மரபில் வைத்துச் சிந்தித்திருப்பது பொருத்தமுடையது அல்ல.

மேலும், "Belief in the body is more fundamental than belief in the soul" என்பது நீட்ஷேயிய தத்துவ / இலக்கிய, இலக்கிய / தத்துவக் கொள்கை. கிறித்துவம் ஆன்மா (Spirit) மீது நம்பிக்கை கொண்டது. உடலைத் துறக்கும் ஒரு மதம் அல்லது தத்துவம் அந்தச் சிந்தனையின் வடிவமான, அந்தச் சிந்தனையேயான, செயலேயான கிறிஸ்துவை மீண்டும் உடலுக்குக் குறுக்குவதுதான் கஸாண்ட்சாகீஸ் இந்த நாவலில் செய்திருப்பதாகும்.

இது ஒரு புறம் இருக்க நம் கேள்வி என்னவெனில் சிலுவையில் நரம்புக்கு நரம்பு, சதை, என்று வார்த்தைகளில் விவரிக்க முடியாத வலியில் துடிக்கும் ஒருவர் திருமணம், காதல், காமம், என்ற கனவுக்குள் போவதகாகக் காண்பிப்பது ஹாலிவுட் ரொமான்ஸ் போல்தான் உள்ளதே தவிர உண்மையில் சிலுவையில் இயேசுவின் கடைசி வார்த்தைகளை பிரதிபலிப்பதாக இல்லை, பிரதிபலிக்க வேண்டிய தேவையில்லை என்றாலும், கட்டற்ற தன் கற்பனையில் கசாண்ட்ஸாகீஸ் ஒருபுறம் கிரேக்க மரபில் வைத்து துன்பியல் நாயகனாக சித்தரித்திருந்தாலும், யேசுவின் கடைசி நேர சோதனை, கசாண்ட்ஸாகீசின் கற்பனை ஹாலிவுட் ரொமான்ஸ் போல்தான் உள்ளது.

ஆனால், அந்தக் கடைசி நேர சபலமும் பிராய்டிய உளப்பகுப்பாய்வின் படி மனித மனத்தின் இயல்பான இன்ப நாட்டமே, இன்பக் கொள்கையே, இதற்குள் யாரும் முயன்றோ, கருதியோ செல்வதில்லை. மனம் என்பது ஒரு முழுமையல்ல, அதன் ஒரு பகுதி மனத்தை தானியங்கியாக ஆட்டுவிக்கிறது. மனதை தொடர்ந்து புலன்களுக்கு உட்பட்ட வாழ்க்கைக்குள் செலுத்துகிறது. இது மனத் தானியங்கிச் செயல்பாடுதான் (Psychic Automatism). இதனை சபலம் என்று ஒழுக்கவாத, சமயவாதப் பார்வையிலிருந்து பார்க்க வேண்டியதில்லை என்று கசாண்ட்ஸாகீசின் இருண்ட கற்பனைக்கு ஓர் இடம் கொடுக்க முடியும் அவ்வளவே

## கிறித்துவ விளக்கங்களின் படி சிலுவையில் இயேசுவின் கடைசி 7 மொழிபுகள்

- *“பிதாவே, இவர்களுக்கு மன்னியும், தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியா திருக்கிறார்களே” (லூக்கா 23:34) என்று சிலுவையில் அறைபவர்களை மன்னிக்குமாறு கூறும்போது யேசு மனிதனைக் கடந்து கடவுளாக இருக்கிறார்.*
- *“இன்றைக்கு நீ என்னுடனே கூடப் பரதீசிலுருப்பாய்” (லூக்கா 23:43) என்ற 2வது வாசகம் தன் அருகில் சிலுவையில் அறையப்பட்ட இரண்டு கள்வர்களிடத்தில் நீங்களும் என்னுடன் சொர்க்கத்தில் இருப்பீர்கள் கூறும்போது விமோசன, வீடுபேறு அனைவருக்குமானது என்று ஒரு*

சகிருதய மனோபாவம் கொள்கிறார்.

- "இயேசு தம்முடைய தாயை நோக்கி: ஸ்திரீயே, அதோ, உன் மகன் என்றார். பின்பு அந்தச் சீஷனை நோக்கி: அதோ, உன் தாய் என்றார்" (யோவான் 19:26—27). யேசு தன் தாய் மேரியைத்தான் காண்கிறார், தன் அன்புக்குரிய சீடனையும் காண்கிறார். யேசுவின் வார்த்தைகள் சீடனை யேசுவின் தாயை தன் குடும்பத்தில் ஒருவராகச் சேர்க்கிறது. இங்கும் கடவுளாகவும் மனிதனாகவும் இருக்கிறார் யேசு.
- இந்த வார்த்தைதான் யேசுவை முழுக்க முழுக்க மனிதர்தான் என்ற வியாக்கியானத்துக்கு இட்டுச் செல்லும் வார்த்தையாக அமைந்தது, "ஏலீ! ஏலீ! லாமா சபக்தானி என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்" (மத்தேயு 27:46).
- "என் தேவனே என் தேவனே என்னை ஏன் கைவிட்டீர்?" என்று யேசு சிலுவையிலிருந்து வேண்டுதல் எழுப்புகிறார். அதாவது இந்த இடத்தில் தனக்கு நேர்ந்தது தனக்குக் கடவுள் கொடுத்த தண்டனையாகவும், தன்னைக் கடவுள் காப்பாற்றவில்லயே என்ற மனித உணர்வுகொள்ளும் தருணமாகவும் பார்க்கப்பட்டு வருகிறது. பிதாவால் கைவிடப்பட்ட மகன் என்பதாக சிலரால் அர்த்தம் கொள்ளப்படுகிறது. இதன் விளைவாக யேசுவுக்கு தியாகம் செய்வதில் நாட்டமில்லை, விருப்பமில்லை என்பதாகவும் வியாக்கியானம் சில மானுடவியல்வாதிகளால் அளிக்கப்படுகிறது. கட்டையோடு கட்டையாக இருந்தால் ஒன்றுமில்லை, உணர்ச்சியிருப்பவர்கள் இதை கூட மனித இயல்பு என்றுதான் கருதுவர். பைபிளின் நடப்பு வியாக்கியானவாதிகள் சிலர் இதனை 'கடவுள் கைவிடவில்லை' கடவுளின் பிடி சற்றே தளர்ந்தது என்று மறுவியாக்கியானம் அளிக்கின்றனர். அதாவது, மனிதர்களில் ஒருவரையொருவர் கைவிடாமல் இருப்பதை உணர்த்துமாறு கடவுள் யேசுவைக் கைவிட்டார் என்கிறது கிறித்துவ விளக்கம். இறையியல்வாதி பிராங்க் ஸ்டேக் என்பவர் யேசுவும் பிதாவும் ஒன்றுதான், கிறிஸ்துவுக்குள் கடவுள் இருக்கிறார், அதே சமயம் அவர் பிதாவிடம் மன்றாடவும் செய்கிறார் என்று விளக்கம் அளிக்கிறார். ஆகவே, இதுவும் யேசுவில் கடவுளும் மானுடமும் ஒன்றிணையும் வார்த்தையாக உள்ளது.
- "நான் தாகமாக இருக்கிறேன்" (யோவான் 19:28) என்கிறார். இதுவும் தன்மை நவிற்சிப்பொருளில் புரிந்து கொள்ளப்பட்டு பஞ்சை வினிகரில் நனைத்து அவரின் தாகம் தணிக்கப்படுகிறது, ஆனால், அவர் கூறுவது உடல் தாகம் அல்ல ஆன்ம தாகத்தைக் குறிப்பிடுகிறார்.
- ஆறாவதாக 'எல்லாம் முடிந்தது' என்கிறார் இயேசு. இது 'வெற்றியின் வார்த்தை'யாக மரபால் பார்க்கப்படுகிறது. இறையியல் ரீதியாக விளக்கம் அளிப்பவர்கள் இந்த இகவுலக அல்லது உலகியல் வாழ்வு முடிவுக்கு வருகிறது என்கிறார் யேசு. அதாவது சிலுவையில் மானுடம் உடைவதையும் கடவுளின் அன்பையும் நிரூபித்துக் காட்டுகிறார். மனித குலத்துக்காக கடவுளுக்கு தன்னை அர்ப்பணிக்கிறார். 'இது முடிந்தது' எனும்போது, நிறைவடைந்தது, என்றும் சதை வாழ்வில் கடவுள் தன் கடைசி மூச்சை விடுகிறார் என்று புரிந்து கொள்ளப்பட வேண்டும்.
- "பிதாவே, உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன்" (லூக்கா 23:46) இது Hypostatic Union என்று விளக்கமளிக்கப்படுகிறது. இயேசு தன் சுய சங்கல்பத்தினாலேயே உயிர்த்தியாகம் செய்கிறார், அவரை யாரும் கொல்ல முடியாது. மேரியின் கருப்பையில் புனித ஆவியின் சக்தியினால் கிறிஸ்து கருத்தரிக்கப்படுகிறார். ஆகவே கிறிஸ்துவில் இறைமை, மனிதம் பிரிக்க முடியாதபடிக்கு இணைவு கொள்கிறது. அவரே கடவுள் அவரே மனிதர். ஆயினும் ஒரு கிறிஸ்துதான். மனிதனும் கடவுளும் ஒன்று என்பது இயேசு கிறிஸ்துவின் சாராம்சத்தில்தான். யேசு என்பவர் இரண்டு நபர்கள் அல்ல. மேலும் கடவுளும் காலத்தின் ஒரு பகுதியாக இருந்து கொண்டு பிற காலங்களில் மனிதராகவும் இருக்கிறார் என்பதும் அல்ல. அவர் ஒருவரே. யேசுவில் கடவுளும் மனிதரும் இணைவு கொள்கிறது, ஒருவரில் இரண்டு, ஒன்றில் இரண்டு இதுதான் மறைபொருள். கடவுள் என்பவர் இருதயத்தை உருவாக்கிய விதமே அது வெறும் மானுட விருப்பு வெறுப்புகள், கடமைகள், தாகங்களுக்கு மட்டும் ஆட்பட்டதல்ல, வரம்பற்றதன் மீதான தாகத்தையும் கொண்டதாகவே மானுட இதயம் படைக்கப்பட்டுள்ளது என்பதே கிறித்துவத்தின் சாராம்சம். நம் இந்தியத் தத்துவச் சொல்லாடலில் விளக்க வேண்டுமெனில் ஜீவ-ஈஸ்வர பேதத்தை இயேசு முறியடிக்கிறார்.

ஆகவே கஸாண்ட்சாகீஸ் கடைசியில் கனவிலிருந்து விழித்து இயேசு தான் சிலுவையில்தான் மரிக்கிறோம் என்பது கண்டு மகிழ்ச்சி கொள்கிறார் எனும்போது சாதாரண மனிதன் தன் துர்கனவிலிருந்து விழித்து எழுந்து 'அப்பாடா இது கனவுதானே?' என்று நினைப்பதை இயேசு கிறிஸ்து என்ற இறைமை-ஆவி-மனிதம் என்ற கூட்டிணைவு தத்துவத்திற்குக் கொண்டு போய் குணாம்சப்படுத்த முடியாது. கடவுளே இயேசுவின் கண்கொண்டுதான் மானுடத்தைப் பார்க்கிறார் என்று விளக்கம் அளிக்கப்பட்டு வரும் நிலையில் இயேசுவையே மானிடக் கண்கொண்டு பார்த்திருக்கிறார் கசாண்ட்ஸாகீஸ் ஏதோ கருத்தியல் ரீதியாகத் திட்டமிட்டபடி செய்தது போல் இருக்கிறதே தவிர இயேசு என்ற தத்துவத்தின் சாராம்சத்திற்கு தன் நாவலில் நியாயம் கற்பித்துள்ளாரா என்பது ஐயமே. ●

**ராஜ. முத்துக்குமார்** <muttukumar@gmail.com>

## அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




விலை ரூ.80-.00




விலை ரூ.110-.00




விலை ரூ.170-.00




விலை ரூ.100-.00




விலை ரூ.90-.00




விலை ரூ.130-.00




விலை ரூ.140-.00




விலை ரூ.80-.00


**அம்ருதா பதிப்பகம்**

1, கோவிந்த ராயல் நெக்ஸ்ட்
அடுக்ககம்
12, இரண்டாவது தெரு
மூன்றாவது பிரதான சாலை
சி.ஐ.டி.நகர் கிழக்கு
நந்தனம்
சென்னை 600035

அலைபேசி:
**94440 70000**

# சென்னைப் புத்தகக் காட்சி 2019 சில குறிப்புகள்

எப்போதும்போல இந்த ஆண்டும் சென்னைப் புத்தக காட்சியில் சில நாட்களைச் செலவழிக்க முடிந்தது. வாங்குபவர்களின் வருகை, விற்பனையின் போக்கு, புதிய நூல்களின் வருகையும் எதிர்கொள்ளப்படும் போக்கும் போன்றனவற்றை மனதில் இருத்திக்கொண்டு புத்தகக் காட்சியைச் சுற்றிவருபவன் நான். அப்படிச் சுற்றுவதன் பின்னணியில் நான் பணியாற்றும் பல்கலைக்கழக நூலகங்களுக்குப் புத்தகங்களுக்குப் பரிந்துரைசெய்யும் வேலை எப்போதும் இருந்து வந்துள்ளது. இந்த ஆண்டு அந்த வேலை இல்லை. அடுத்த ஆண்டுமுதல் இருக்கப்போவதில்லை.

நான் பணியாற்றிய புதுச்சேரி பல்கலைக்கழக நூலகத்திலும் மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக்கழக நூலகத்திலும் வாங்கி வைக்க வேண்டிய புத்தகங்களைப் பரிந்துரை செய்வதற்காகவும், என்னுடைய துறை நூலகத்தில் இடம்பெற வேண்டிய நூல்களைத் தெரிவுசெய்யவுமே ஒவ்வொரு ஆண்டும் சென்னைப் புத்தகக் கண்காட்சிக்குப் போய் வருவேன். 30,000 ரூபாய்க்குக் குறையாமல் துறை நூலகத்திற்கு நிதி ஒதுக்கித் தருவார்கள். ஐந்தாண்டுத் திட்ட காலத்தின் தொடக்க நிலையில் அந்தப் பணம் சில லட்சங்களாகக்கூட இருந்ததுண்டு. என்னென்ன நூல்களை வாங்க வேண்டும் என்ற பட்டியல் தயாரிப்பதும் அதை ஏற்றுப் பரிந்துரைப்பதும் கடந்த கால் நூற்றாண்டுகளாக நான் செய்துவரும் கல்விப்பணிகளில் விருப்பமான பணி. விருப்பமான இந்தப் பணியே சென்னைப் புத்தகக் கண்காட்சியை ஒவ்வொரு ஆண்டும் பார்க்கும்படியான நெருக்கடிக்குள்ளாக்கியது.

எனது சொந்த வாசிப்புப் பழக்கத்திற்கும் சென்னைப் புத்தகக் கண்காட்சிக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாகச் சொன்னால் அது உண்மையில்லை. என்னுடைய வாசிப்புகள் பெரும்பாலும் நூலகங்கள் சார்ந்தே நடந்து வந்துள்ளது. பல்கலைக்கழகப் பேராசிரியராக இருக்கும் எனக்கு இந்த வசதி சாத்தியம்; மற்றவர்களுக்கு அது சாத்தியமில்லை. அதைவிடவும் உடனடியாக வாசிக்கவேண்டும் என்று எந்த புத்தகத்தையும் நினைப்பதில்லை என்பதும்கூட உண்மையே. வாசித்தே ஆக வேண்டுமென்றால் அந்தப் புத்தகங்களைப் புத்தகக் கடைகள் வழியாகவோ, தபால் மூலமாகவே பெற்றே வாசித்துக் கொண்டிருக்கிறேன். பல நேரங்களில் எழுத்தாள நண்பர்கள் அவர்களது நூல்களை அனுப்பிக்கொண்டே இருக்கிறார்கள். இருந்தபோதிலும் ஒவ்வொரு ஆண்டும் சென்னைப் புத்தகக் கண்காட்சியின் பார்வையாளனாகப் போய்க்கொண்டே இருக்கிறேன்.



பல்கலைக்கழகத்திற்கு நிதி வழங்கும் மானியக்குழு இந்த ஐந்தாண்டுத் திட்டத்தில் அச்சு நூலகங்களை விட இணைய நூல்களுக்கு முன்னுரிமை வழங்கும்படி சொல்லிவிட்டது. அதனால் நூல்களைத் தேர்வுசெய்வதும் பட்டியலிடுவதும் இந்த ஆண்டுக்கான வேலையாக இல்லை. இந்த ஆண்டு மட்டுமா? இனிவரும் ஆண்டுகளிலும் இருக்காது. அடுத்த ஆண்டில் நான் நிறுவனம் சார்ந்த வேலையிலிருந்து ஓய்வுபெறுகிறேன். என்றாலும், கண்காட்சியை வேடிக்கை பார்ப்பதற்காகவும் கண்காட்சியில் காணாமல் போவதற்காகவும் சென்னைப் புத்தகக் காட்சிக்கு போகவேண்டும் என்று தோன்றுகிறது.

இந்த ஆண்டு பொங்கலையொட்டி 9 நாட்கள் விடுமுறை. சென்னையில் 5 நாட்கள். புத்தகக் காட்சிக் கூட்டத்தில் சில நாட்கள் சுற்றிவர முடிந்தது. ஒரு கல்வியாளனாக — அதிலும் ஒரு தமிழ்ப் பேராசிரியராகத் தமிழில் நூல்கள் வெளியிடும் பதிப்பகங்களின் பக்கமே எனது கவனங்கள் இருக்கும். எனது வாசிப்புக்கான நூல்கள் சமகால இலக்கியங்களாகவும் கலைக்கோட்பாடுகளாகவும் இருந்தாலும் மரபு இலக்கியங்கள் சார்ந்து வரும் நவீனத்துவ ஆய்வுகளையும் கவனத்தில் கொள்வேன். அதற்காகத் தமிழியல் புலம்சார்ந்த நூல்கள் வெளியிடும் பதிப்பகங்களைத் தேடிச் செல்வதுண்டு. முன்பெல்லாம் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமும் ஐந்திணை, மணிவாசகர் போன்றனவும் எனது நேரத்தை எடுத்துக்கொள்ளும். இப்போது என்னை இழுப்பதே இல்லை. புதியனவற்றை அவை நெருங்குவதே இல்லை. அதேபோல் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை நூல்களும் பழையனவாக இருக்கின்றன. உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் சில ஆண்டுகளில் புதியனவற்றைக் கொண்டுவருகிறது. சில ஆண்டுகளில் பழையனவற்றையே காட்சிப்படுத்துகிறது. இந்த ஆண்டு பெரும்பாலும் பழையன மட்டுமே.

தமிழியல் புலத்தின் தேவைக்கான நூல்களை வெளியிட வேண்டும் என்ற விருப்பமும் நோக்கமும்




'உயிர்மை', 'காலச்சுவடு', 'அம்ருதா', 'உயிரெழுத்து', 'க்ரியா' போன்ற பதிப்பகங்களுக்கு இப்போது இல்லை. *10* ஆண்டுகளுக்கு முன்பு 'க்ரியா'வும் 'காலச்சுவடு'ம் அப்படியான திசைகளில் பயணம் செய்ததுண்டு. இந்த ஆண்டு அப்படியொரு பதிப்பகமாக இருந்தது 'அடையாளம்' பதிப்பகம் மட்டுமே. அதன்பிறகு 'அன்னம்—அகரம்'. மூன்றாவதாகக் 'காவ்யா'. நியூ செஞ்சுரி புத்தக நிலையத்தின் வெளியீடுகளும் இந்நோக்கம் கொண்டன. ஆனால், அதைத் தாண்டிய நோக்கங்களுடனும் நூல்கள் வெளியிடுகிறது. பின்னிரண்டும்—அன்னமும் காவ்யாவும் புதிய முயற்சிகளில் இறங்காமல் பழையனவற்றைத் தொகுத்தல், விரித்தல், நீட்டல் என்ற அளவில் செயல்படுகின்றன. புதிய சிந்தனை முதலீடும் பணமுதலீடும் செய்யவேண்டுமென நினைப்பதாகத் தெரியவில்லை. ஆனால், 'அடையாளம்' பதிப்பகம் தமிழியலின் தேவைகளையும் பரப்பையும் உணர்ந்து இலக்கியம் தாண்டி மொழியியல், மானுடவியல், சமூகவியல், கலைக்கோட்பாடுகள், அகராதி ஆக்கம் எனக்கால்களையும் கைகளையும் அகலப் பரப்பி நூல்களை வெளியிடுகிறது. அதன் வெளியீடுகள் கல்விப்புலத்தில் தாக்கம் செலுத்தினால் தமிழியல் நவீனத்துவம் உள்வாங்கி மேலெழும்பிவிடும்.

சென்ற ஆண்டு புத்தகக் காட்சி முடிந்து நெல்லை திரும்பியபோது பெட்டி நிறைய எனது நூலகத்திற்கெனப் புதிய நூல்களை கொண்டுவந்தேன். அவற்றில் புனைகதைகளான சிறுகதைகளும் நாவல்களும் கணிசமாக இருந்தன. வெவ்வேறு வெளிகளுக்குள் வாசகர்களை அழைத்துச் செல்லும் ஒரு டஜன் நாவல்கள். அவற்றில் பாதி இன்னும் படிக்கப்படாமல் இருக்கின்றன. இந்தமுறை வாங்கும் நாவல்களும் சேர்ந்துவிடுமோ என்று அச்சமாக இருந்தது. ஆனால், இந்தப் புத்தகக் காட்சியில் அந்த அளவுக்கு நாவல்கள் புதிதாக வரவில்லை. நாவல்கள் மட்டுமல்ல; சிறுகதைத் தொகுப்புகளும்கூடப் புதியதாகத் தொகுக்கப்படவில்லை.

தமிழ்நாட்டுப் புனைகதையாளர்கள் ஓய்வெடுத்துக்கொண்டாலும் ஈழத்தமிழ் எழுத்தாளர்களும் புலம்பெயர் தமிழ் எழுத்தாளர்களும் இன்னும் புனைகதைப் பரப்பில் தீவிரமாக எழுத வேண்டுமென நினைத்து நாவல்களை எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். நோயல் நடேசனின் 'கானல் தேசம்' (காலச்சுவடு), குணா கவியழகனின் 'போருழல் காதை' (அகல்), தீபச்செல்வனின் 'நடுகல்' (டிஸ்கவரி புக் பேலஸ்) ஆகியன வாசிக்கப்பட வேண்டியன. அதேபோல் பூவரசி பதிப்பகம் மூலம் 'காப்பு' என்னும் தொகைநூல் இந்த ஆண்டு கவனம் பெறும் நூல்களுள் ஒன்றாக ஆகியிருக்கிறது. அந்தக் குறிப்பு பொருத்தமானது என்பதை உறுதிப்படுத்துவேன். இத்தொகை நூலுக்கு முன்னுரை எழுதியிருக்கிறேன். அதற்காக *46* எழுத்தாளர்களின் *59* கதைகளை வாசித்தேன். இவற்றில் *5* சிறுகதைகள் சிங்கள மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட கதைகள். அதே பதிப்பகம் ஆய்வாளர் மு.திருநாவுக்கரசு எழுதியுள்ள 'பூகோளவாதம் புதிய தேசியவாதம்' என்றொரு நூலையும் வெளியிட்டுள்ளது. இந்தியப் பெருங்கடலில் இன்னொரு நாடு உருவாவதை இந்திய தேசியம் எப்படிப் பார்த்தது? இனியும் எப்படிப் பார்க்கும்? என்ற கேள்வியோடு வாசிக்கவேண்டிய நூல்

அதே நேரத்தில் எப்போதும்போலக் கவிகள்,

தொகுப்புகளை வெளியிட்டார்கள். உணர்ச்சியின் பிரவாகம் கவிச் சொற்கள் என்பதை கவிதைத் தொகுப்புகள் தொடர்ச்சியாக வந்து உறுதிப் படுத்துகின்றன. கவிஞர்களின் உற்சாகமான முகங்களையும் வெளியீட்டு நிகழ்ச்சிகளையும் ஒவ்வொரு நாளும் காணமுடிந்தது. ஆண் கவிகளும் பெண் கவிகளுமாக புத்தகக் காட்சி அரங்குகளில் அலைந்துகொண்டே இருந்தார்கள். தங்கள் தொகுப்புகளைத் தெரிந்தவர்களிடமும் மூத்த எழுத்தாளர்களிடம் தந்து படம் எடுத்து முகநூலில் சிரித்தார்கள். எப்போதும்போல மனுஷ்யபுத்திரனின் மூன்று புதுத் தொகுப்புகள் காட்சியில் இருந்தன. சேரன், இந்திரன் போன்ற மூத்த கவிகளின் தொகுப்புகளும் கிடைத்தன.

மரபிலக்கியங்களை வெளியிடும் பல தமிழ்ப் பதிப்பகங்கள் திருக்குறள் மூலம், திருக்குறள் மூலமும் அருஞ்சொற்பொருளும், பதவுரை, விளக்கவுரை போன்றவற்றிற்காக வள்ளுவனுக்கும் உரையாசிரியர்களுக்கும் தரவேண்டிய உரிமத் தொகைகளை (ராயல்டி) பொன்கலஞ்சுகளாகக் கணக்கிட்டுப் பல ஆண்டுகளாகக் காப்பறைகளில் பத்திரமாக வைத்திருக்கின்றன. அவ்வைப்பு நிதிகள் இவ்வாண்டும் வட்டியோடு சேர்ந்திருக்கும். அதே போல இக்கால எழுத்துக்களைப் பதிப்பிக்கும் பதிப்பாளர்களும் மொழிபெயர்ப்பாளர்களும் மார்க்சிய ஆசான்களான மார்க்ஸ், எங்கெல்ஸ், லெனின் மட்டுமல்லாமல் கலை இலக்கியக் கோட்பாட்டு நூல்களையும் மறுபதிப்புகள் செய்து உரிமத்தொகையைப் பத்திரமாக வைத்திருக்கின்றன என்றே நினைக்கிறேன். அந்த வரிசையில் இந்தியப் பேராசான்களான அம்பேத்கர், பெரியார், காந்தி ஆகியோரும் இருக்கிறார்கள். பதிப்பாளர்கள் ராயல்டி தரத் தேவையில்லாத — நாட்டுடைமை ஆக்கப்பட்ட எழுத்தாளர்களின் எழுத்துகளை விதம்விதமாக வெளியிடுகிறார்கள். புதுமைப்பித்தன் எப்போதும் நல்ல சரக்குகளைத் தந்தவராக இருக்கிறார். அசோகமித்திரன், சுஜாதா, சுந்தர ராமசாமி, மௌனி, நகுலன் போன்றோரும் அந்த வரிசையில் இருக்கிறார்கள். இப்போதும் எழுதிக்கொண்டிருக்கும் மூத்த எழுத்தாளர்களின் கி. ராஜநாராயணன் அளவுக்கு விற்கக் கூடியவர்களின் பட்டியலைப் போடமுடியவில்லை. 'அன்னம்' பதிப்பகத்தில் அவர்தான் ஜ்வலிக்கும் நட்சத்திரம். அதேபோல் 'க்ரியா'வுக்கு இமையம்.

இந்தப் புத்தகக் காட்சியில் ஜீரோ டிகிரி பதிப்பகத்தில் சாரு நிவேதிதாவும் தேசாந்திரியில் எஸ். ராமகிருஷ்ணனும் தினசரியும் காட்சி அளித்தார்கள். சாகித்திய அகாடெமி விருது கிடைத்த நிலையில் எஸ்.ரா.வின் தேசாந்திரி பதிப்பகம் களைகட்டியது. இல்லையென்றாலும் அவர் எழுத்துகள் வாசகப் பரப்பைக் கொண்ட எழுத்தாகக் கடந்த 10 ஆண்டுகளில் மாறியிருக்கிறது. சாருவின் நூல்கள் கிழக்குக்குப் போய்விட்டு இந்த ஆண்டு அவரை நட்சத்திரமாக்கும் நோக்கில் தொடங்கப் பெற்றுள்ள ஜீரோ டிகிரியில் மையம் கொண்டிருக்கின்றன.



சாருவுக்கும் ஜீரோ டிகிரிக்கும் எழுத்தைத் தாண்டி வேறெந்தத் தொடர்பும் இல்லையென்று ஒவ்வொரு நாளும் சத்தியம் செய்துகொண்டிருக்கிறார். இன்னொரு நட்சத்திர எழுத்தாளரான ஜெயமோகனின் எழுத்துகள் கிழக்கிலும் நற்றிணையிலும் அலைந்து கொண்டிருக்கின்றன.

புதிதாக எழுதவரும் ஒருவரது எழுத்து கவனிக்கப்படும் வாய்ப்புகள் சிலபல காரணங்களால் ஏற்படுகின்றன. அவர் தனது எழுத்தின் வழியாக முன்வைப்பதற்குத் தேர்வுசெய்யும் நிகழ்வு, அதன்மீதான அவருடைய பார்வைக்கோணம், அதனைச் சொல்வதற்காகக் கையாளும் மொழிநடை, வாசிப்பவரின் மனத்திற்கும் செயல்பாடுகளுக்கும் தரும் வேலை ஆகியன அவற்றுள் சில. எப்போதும் புதிய எழுத்தாளர்களின் நூல்களைப் பதிப்பிக்கும் 'உயிர்மை' பதிப்பகம் இந்த ஆண்டும் புது எழுத்தாளர்களையும் புதுவகை எழுத்தையும் 'அடையாளம்' காட்டியிருக்கிறது. ஷாலின் மரிய லாரன்ஸின் இரண்டு கட்டுரைத் தொகுப்புகள் — 'வடசென்னைக்காரி', 'ஜான்ஸி ஏன் குறைவாகப் பாடினார்' என்பன கவனம் பெற்றன. அவரது எழுத்து ஒடுக்குதலைக் குற்றமனத்தோடு பார்க்காமல் கொண்டாட்ட மனநிலையோடு அணுகும் தமிழர்களின்/இந்தியர்களின் பொதுப்புத்தியைக் கேள்விக்குள்ளாக்கும் தன்மையோடு உள்ளன. சமகால நிகழ்வுகளின் மீது சமகாலச் சொல்லாடல்களான தலித்தியம், பெண்ணியம் எனச் செயல்பாட்டை முதன்மைப்படுத்தும் கோணங்களிலிருந்து விவாதிக்கிறார். இவ்விரண்டும் சேர்ந்து கவனிக்கப்படும் எழுத்தாக ஆக்கியிருக்கிறது. ஆனால், அவர் எழுதிய பத்திரிகைகளின் அளவு மற்றும் தேவைக்கேற்ப ஒற்றை முன்வைப்பு என்பதோடு உள்ளிழுத்துக் கொண்டிருக்கிறது. தமிழ்மொழியைக் கையாள்வதில் தேர்ச்சிக்குறைவும் வெளிப்படுகிறது. நூலாக்கும்போது திரும்பவும் வாசித்துத் திருத்தங்கள் செய்து வெளியிட்டிருக்க வேண்டிய எழுத்துகள் இவ்விரண்டு தொகுப்பிலும் உள்ள கட்டுரைகள். 'உயிர்மை' வெளியிட்டுள்ள '96' படம் பற்றிய சரவண கார்த்திகேயனின் நூல் புதிய வகைமை நூல். உளவியல் மருத்துவர் சிவபாலன் இளங்கோவனின் உளவியல் சார்ந்த நூல்களும் கவனம் பெற்றதைப் பார்க்க முடிந்தது.

பேரரசியலைப் பின்னுக்கு வைத்துக்கொண்டு நுண்ணரசியலைப் பண்பாட்டுத் தளவெளிப்பாடாகப்



பேசும் அமைப்புகள் வெவ்வேறு காலகட்டங்களில் வெவ்வேறு ஊடகங்களைப் பரப்புரைக் கருவிகளாகப் பயன்படுத்தியிருக்கின்றன; இப்போதும் பயன்படுத்துகின்றன. நிகழ்காலத்தில் எண்ணிய ஊடகங்களின் வழிப் பரபரப்பாக இயங்கும் சமூக ஊடகங்கள் முதன்மையாக இருக்கின்றன. அதன் இயக்கம் கூட்டம் தவிர்த்து தனியுடல்களைக் கோருவது. ஆனால், அச்சு ஊடகங்கள் எப்போதும் கும்பலை உருவாக்குவன. அதனால், தீவிரமாக இயங்கும் வெளிகளாக அச்சு ஊடகங்கள் எப்போதும் இருக்கின்றன.

இந்தப் புத்தகக் காட்சியில் 'நிமிர்' (மே 17 இயக்கம்), 'களம்' (நாதக), 'நீலம்' (இயக்குநர் பா. ரஞ்சித்) முன்னெடுப்பு ஆகியன அரங்குகளை அமைத்துள்ளன. முன்னிரண்டும் ஒற்றைச் சிறு அரங்கத்துடன் நிற்க, 'நீலம்' இரண்டு அரங்குகளில் நூல்களோடு சிலைகள், சிற்பங்கள் எனப் பரப்பியிருக்கிறது. பிற பதிப்பகங்கள் வெளியிட்ட தலித் எழுத்துகளும் தலித் கருத்தியல் தொடர்பான நூல்களும் அடுக்கப்பட்டுள்ளன. ஒரே இடத்தில் கிடைக்கும்படியான வெளிப்பாடு.

புத்தக விற்பனையின் எல்லைகளை அறிந்துகொண்ட அனுபவத்தோடு பதிப்பகப் பரப்பிற்குள் நுழைந்திருக்கும் வேடியப்பன் இந்த ஆண்டு சில புதிய நூல்களையும் பல பழைய பனுவல்களையும் அச்சிட்டு விற்பனைக்கு வைத்துள்ளார். அவரது டிஸ்கவரி புக் பேலஸ் வெளியீடான சரவணன் சந்திரனின் சுபிட்ச முருகனும் நவீனாவின் லிலித்தித்தும் ஆதாமும் நன்றாக விற்றுக் கொண்டிருந்தன. நவீனாவின் நூல் மின்னம்பலத்தில் தொடர் கட்டுரைகளாக வந்தது. மொத்தமாக வாசிக்கும்போது நெருங்கி வந்து பேசும் தொனியோடு கூடிய நடையாக பளிச்சென்று தோன்றுகிறது. பெண்ணிய விவாதங்கள் என்ற வரையறைக்குள் நின்றும் நழுவியும் விவாதங்களைப் பரப்பி வைத்துள்ளார் நவீனா.

புதிய மொந்தையில் பழைய கள் என்பது போல பழைய எழுத்துகளை ஒவ்வொரு பதிப்பகமும் ஒவ்வொரு விதமாகப் பரப்பி வைக்கின்றன. டிஸ்கவரி வெளியிடும் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள் அடங்கிய சிறுகதைத் தொகுப்புகளின் நோக்கம் குறிப்பாக இல்லை. தேர்வுசெய்யப்பட்ட விதம், அதற்கான முன்னுரை போன்றவற்றின் மீது விமரிசனங்கள் எழக்கூடும். டிஸ்கவரி புக் பேலஸ் சிறிய தொகுதிகளைத் தருவதற்கு முன்பே 'நற்றிணை' பதிப்பகமும் 'காலச்சுவடு'ம் வேறுவிதமாகப் பழையனவற்றைப் பரப்பி வைப்பதைத் தொடங்கிவிட்டன. மொத்தத் தொகுதி, கிளாசிக்கல் வரிசை, ஆசிரியரின் முதல் தொகுதி எனப் பெயரிட்டுத் தரப்படும் எல்லாமும் பழைய கள் புதிய மொந்தைதான். அவ்வைப்புகளில் ஒரு விமரிசனப் பார்வை இல்லை; கல்விப்புலத் தேவையை நிறைவேற்றும் பார்வைகளும் இல்லை. அச்சுத்தொழில் வளர்ந்துள்ளதால் அச்சிட்டு வைக்கிறோம் என்பதைத்தவிர வேறொன்றும் இல்லை. அவற்றை வைத்துக்கொண்டு பதிப்பு வரலாறு, சமகாலத்தைப் பதிவுசெய்யும் போக்கைக் கணக்கும் ஆய்வுகள் போன்றவற்றை மேற்கொள்பவர்கள் திண்டாடத்தான் செய்வார்கள். பெரும்பாலான நூல்களில் முந்திய பதிப்புகள் மறைக்கப்பட்டுள்ளன.

இந்தப் புத்தகக் காட்சியில் சினிமாவின் உள் நுட்பமான எடிட்டிங் பற்றிய நூலொன்றைக் காண முடிந்தது. முன்பு சுஜாதா எழுதிய 'திரைக்கதை எழுதுவது எப்படி?' பாணியைக் கொஞ்சம் விரிவுபடுத்தி, உதாரணங்களோடு கதை, திரைக்கதை, வசனம் எழுதுவது பற்றிய நூல்கள் சிலவற்றைப் பார்க்கமுடிந்தது, சென்னையில் 10—க்கும் மேற்பட்ட சினிமா கற்பிக்கும் சிறு, குறு நிறுவனங்கள் இருக்கின்றன. அவை எவையும் முறையான பாடத்திட்டங்களோடும் பார்வை நூல்களோடும் இயங்கவில்லை. பழைய பாய்ஸ் கம்பெனிகளின் கற்பித்தல் முறையில்தான் நடக்கின்றன. முறைசாராக் கல்வியை முறையான கல்வியாக மாற்ற பாட நூல்களும் பார்வை நூல்களும் வேண்டும். அத்தேவையை நிறைவேற்றும் நூல்களைச் சினிமாத் தொழிலுக்கு வெளியிலிருப்பவர்கள் எழுதுவதைவிட உள்ளே இருப்பவர்கள் எழுதுவதே சிறந்தது. அந்த நகர்வை நோக்கிய நூல்களைச் சில கடைகளில் பார்க்க முடிந்தது. 'நிழல்' திரைப்பட இயக்கத்தின் பின்னிருக்கும் திருநாவுக்கரசு, 'பேசா மொழி' இதழின் பின்னிருக்கும் அருண், 'அயல் சினிமா' பின்னிருக்கும் ஜா. தீபா போன்றவர்கள் இந்தத் துறையில் பங்களிப்புச் செய்கிறார்கள் இந்த ஆண்டின் குறிப்பிடத்தக்க நகர்வாக இதனைச் சுட்டிக்காட்டலாம். அம்ஷன் குமாரின் குறும்படம் பற்றிய நூலொன்று வந்துள்ளது. யமுனா ராஜேந்திரனின் கட்டுரைகள் அடங்கிய தொகுப்பும் அதில் அடங்கும். ஆனால், சினிமாவின் உள்ளிருந்த செயல்பட்டவர்களிடமிருந்து இத்தகைய நூல்கள் எழுதப்படவேண்டும்

இலக்கியத்திற்குள்ளிருந்து இலக்கியத்தை விவாதிப்பது போலவோ, கல்விப்புலத்திற்கு உள்ளிருந்து கல்விப்புலங்களை விமரிசனம் செய்வதுபோலவோ தமிழ் சினிமா, தமிழ் தொலைக்காட்சி போன்றவற்றைக் குறித்து உள்ளேயிருந்து விவாதிக்கும் கட்டுரைகள் எழுதப்படுவதில்லை; விவாதங்கள் நடத்தப் பெறுவதில்லை. அப்படிப் பேசும் அறிவும் நுட்பங்களும் பல இயக்குநர்களுக்கும் நடிகர்களுக்கும் இருந்தாலும் அதன் உள்ளிருந்து பேசும் குரல்கள் எப்போதும் உண்மையாகப் பேசியதில்லை. அதே நேரத்தில் சினிமாக்காரர்கள் சினிமாவைத் தவிர்த்து மற்ற துறைகளைக் குறித்து ஆவேசமாகவும்





உணர்ச்சிகரமாகவும் விவாதிக்கிறார்கள். ஒரு கலைத்துறை அல்லது அறிவுத்துறை வணிகத்தை மட்டும் முதன்மையாகக் கருதும்போது இப்படித்தான் நடக்கும். கலை வியாபாரமாக மாறுதலின் இயங்கியல் விளைவு இது.

2000-த்தின் தொடக்க ஆண்டுகளின் திறனாய்வு நூல்களும் கோட்பாட்டு நூல்களும் அரசியல் விவாத நூல்களும் சென்னைப் புத்தகக் காட்சியின் பரபரப்புகளாக இருந்தன. இந்த ஆண்டு அப்படியான புதிய நூலொன்றுகூட வரவில்லை. பள்ளிப் பாடங்களைத் தாண்டி வாசிப்புப் பழக்கத்தை உருவாக்கவேண்டும் என நினைக்கும் தமிழ்ப்பெற்றோர்களின் பாடு திண்டாட்டம்தான். அதற்கான நூல்கள் தமிழில் எழுதப்படவில்லை. சிலம்பு, மணிமேகலை, சங்கச் செவ்வியல் கவிதைகளைக் கதைகளாகவும் சாரமாகவும் சிறார்களுக்கான வடிவில் தரவேண்டும் என்ற ஆசை இருக்கிறது. அதற்கான மொழிநடை என்னிடம் இல்லை என்பதும் புரிகிறது. ஆனால், முயற்சி செய்யவேண்டும்

சென்னை மாநகரின் ஆண்டுப் பெருநிகழ்வுகளின் ஒன்றாகிவிட்ட சென்னைப் புத்தகக்காட்சி இந்த ஆண்டும் நடந்து முடிந்துவிட்டது. இந்த ஆண்டு கண்காட்சி நடந்த நந்தனம் ஒய்.எம்.சி.ஏ. மைதானம் புத்தகக் காட்சிக்குப் புதிய இடம் அல்ல. அங்கிருக்கும் மைதானங்களில் சிலவற்றில் இப்போது நடந்த விளையாட்டுக் கல்லூரி மைதானம் ஒரு மாற்று இடம். இதற்கு முன்பு இதே வளாகத்தில் வேறொரு இடத்தில் நடந்தது. சென்ற ஆண்டும் அதற்கு முன்பு சில ஆண்டுகளிலும் கீழ்ப்பாக்கத்தில் இருக்கும் பள்ளியொன்றின் மைதானத்தில் நடந்த புத்தகக் காட்சி பல ஆண்டுகள் காயிதே மில்லத் கல்லூரி வளாகத்தில் நடந்தபோதும் நான் போயிருக்கிறேன். தீவுத்திடலில் நடந்து தீப்பற்றிச் சோகநிகழ்வான ஆண்டொன்றில் நான் போனதில்லை.

42 ஆண்டுகளாக நடக்கும் சென்னை புத்தகக் காட்சி, 60 வயதாகிவிட்ட எனது வாழ்வின் ஆண்டுப் பங்கேற்றலில் ஒன்றாக இருக்கிறது. ஏனென்றால், நான் புத்தகங்களோடு இருக்கும் கல்வியாளனாக இருக்கிறேன்; புத்தகங்களை எழுதுபவனாக இருக்கிறேன்; புத்தகங்களை நுகர்ந்து தடவிக் களிக்கும் வாசகனாக இருக்கிறேன். என்னையும் என்னைப் போன்றவர்களையும் ஒவ்வொரு வருடமும் வேறுவேறு இடத்திற்கு வரும்படி அழைக்கும் பதிப்பாளர்களின் கூட்டமைப்பான பபாசியால் நிரந்தரமான நிகழ்விடம் ஒன்றை உறுதிசெய்ய முடியாதது வருத்தமான ஒன்றுதான்.

புத்தகக் காட்சி என்ற ஒன்று சென்னை போன்ற ஒரு பெருநகருக்கு உருவாக்கித் தரும் அடையாளங்களும் தாக்கங்களும் பயன்மதிப்புகளும் பலவிதமானவை. அதன் பின்னே அச்சுத் தொழிலின் பணச்சுழற்சி இருக்கிறது. காகிதத் தேவை என்னும் உற்பத்தித் தொழிலோடு தொடர்பிருக்கிறது. பலநாடுகளிலும் வாழும் தமிழர்களின் வருகை சார்ந்த சுற்றுலாப் பொருளாதாரம் அதனோடு உறவுகொண்டிருக்கிறது. இயல் இசை நாடகம் என்னும் தமிழ்க் கலை சார்ந்த பரப்புரைகள் அங்கே நடக்கின்றன. அவற்றையெல்லாம் தாண்டி தமிழ் மனத்தின் நுண் ரசனையையும் கூட்டு மனநிலையையும் கட்டியெழுப்பும் நூல்கள் அங்கே காட்சிப்படுத்தப்படுகின்றன. இவற்றை உணரும் அரசமைப்பு தானே முன்வந்து நிரந்தரமான இடம் ஒன்றை அடையாளப்படுத்தி இலவசமாகவே வழங்க வேண்டும். அதற்கான முன்முயற்சிகளைச் செய்ய வேண்டியவர்கள் செய்ய வேண்டும். ●

**அ.ராமசாமி** <ramasamytamil@gmail.com>

# பத்து கவிதைகள்



1

அருகிலும் தொலைவிலுமாக
ஏதென்றே புரியவில்லை
ஆனாலும் ஏதோ தெரிகிறது என்பதாக
இப்படியே நின்று கொண்டிருக்கிறோம்

எத்தனை யுகங்கள்
இனியும் கழியுமென்றும் தெரியவில்லை.

2

தேவதேவனைச் சந்திக்கும்போது கேட்க வேண்டும்
தொலைவிற்கும் அண்மைக்குமிடையில்
மேய்ந்து கொண்டிருக்கும் ஆடுகள்
உங்களிடம் சொன்ன ரகசியங்கள் என்ன என்று

அவர் அதைச் சொல்லாமல்
ரகசியமாகவே வைத்திருக்கவும் கூடும்.

ஆனாலுமென்ன
நாம் கேட்பதிலொன்றும் தவறல்லவே.

அவர் சொல்லாமல் விட்டாலும் கூடத்தான்.

3

இப்படியே யுகங்களும் கணங்களும்
பருவகாலங்கள் பலதும் கடந்து செல்கின்றன.

ஏதென்றறியாமலும்
எதுவோ என்று தெரிந்துமாக .

நீயும் நானும் எந்தப் பருவ காலத்தில் நிற்கிறோம்?

4

நாம் எங்கிருப்பது இனி
எப்படியிருப்பது?

பெருங்காடென
யாரோ விதி செய்கிறார்

காடும் அழிகிறது அவ்விதியில்.

கடலுமினி
மீனும் வானுமின்றிப் போகக் கடவதென்று
விதிசெய்யுமவர் உரைக்கிறார்
"பெருங் காதலுறுக
இப்புவி மீதில்
மேவிப் பிரமஞ்சமெங்கணுமே"

மனமதிர
என் காதைப் பிளந்தொலிக்கிறது
அவர் பிடியில் நசியும் பிரபஞ்சத்தின் முனகலொலி.

5

அது யாருடைய முகம்
யாருடைய நினைவு
யாருடைய இசைக்குறிப்பு
யாருடைய பயணம்
யாருடைய ஒற்றைச் சிறகு?

இதையெல்லாம் அறிந்து எழுதச் சொன்னவருக்காகக்
காத்திருக்கிறார் தேவநாதன் நெடுநாளாய்...

அம்பாப் பாடல்களின் நிழலோரம்
பல்லாயிரம் நூற்றாண்டுகளாக
தேவநாதனுக்காகக் காத்திருக்கிறாள்
நம்முடைய தங்கக் கிளியம்மா.

6

இருளையும் ஒளியையும் இத்தனை அளவாகக் கலந்து
நம்முன்னால் வைத்துச் சென்றது யார்?

இந்தக் கணங்கள் இப்படியே இருக்கக் கடவது என்று
பிரார்த்திக்கிறது வெண்பூனை

தியானத்தில்
விழி மூடிச் சிரிக்கின்றன வெண்கிளிகள்

பரவசமா துயரிழைய அவிழ்தலா?
அமுதமாய்ப் பொங்கி வழிகிறது

விண்ணிசை

மூண்டெரியும் நெருப்பின் நடனத்தோடு
ஆற்றோரம் நடந்து செல்கிறாள் என்னுடைய கிளி

கிண்கிணி மணியொலிக்கத்
தலையசைக்கும் எருதுகளை அழைத்துக் கொண்டு
மரங்கள் அடர்ந்த சிற்றொழுங்கையில் போகும்
மதனராஜனைத் தொடர்கிறது பரிதி.

ஒற்றைச் சுடராகி ஒளிரும் வானவிளக்கை
நோக்கிக் குவிகிறதென் சிரசு.

7

பளபளக்கும் கத்திகளுக்கு நடுவே
யாரோ நடந்து போகிறார்கள்

எந்த நொடியில் குருதி பீறிடும்
எக்கணத்தில் தலைகள் துண்டாடி விழும்
எத்தனை உடல்கள் வெட்டுண்டு சரியுமென்ற பதற்றம்
எல்லோரையும் பற்றிப் பிடிக்கிறது

யாராயிருக்கும் அது
ஏனிப்படிச் செல்லவேண்டும்
என்ற பதற்றத்தோடு கேட்கிறாள் ஞானச்செல்வி

பெருங்குரலில் ஊழையொன்று கேட்கிறது.

"...இப்படித்தான் கத்திகளின் நடுவே வாழ்ந்து முடித்தோம்"
என்று சொல்லும் ராசம்மாக் கிழவிக்குத் தெரியுமா
கத்திகளின் நடுவேதான் நாங்களும் நம் நிழல்களும்
பதறியபடி நிற்பதை.

8

மஞ்சள் முகில்களைக் கொத்திச் செல்கின்றன
வெண்நீலப் பறவைகள்
சற்று முன்தான் அந்த வெண்நீலப் பறவைகள்
எங்களைக் கடந்து சென்றன அல்லவா!

அதோ அவரேதான்,
அந்தப் பறவைகளின் தோழன்
எங்களூர்க் காத்தான்
தந்தானா தானே.. தன்னானத் தானே...
தக தெய் தெய் தந்தானத் தானே...
தக தெய்... தகிடதத் தெய்..
என்று கூத்துக் களரியில்



விசுவானந்ததேவன்

ஆடிப்பாடி அமர்க்களம் பண்ணிடும் வீமன்,
வித்தகன்

வெண்ணீலப் பறவைகள்
அலகினால் கொத்திச் சிறகினால் ஏந்தி
அழைத்துக் கொண்டு போகின்றன அவரை எங்கோ..

மஞ்சள் முகிலும் வெண்ணீலப் பறவைகளுமான
உலகொன்றில் கூத்தாடப் போகிறார்
எங்களூர்க் காத்தான்.

9

இந்த மழைநாள் இத்தனை பரவசமாயிருக்கும்
என்று எண்ணவேயில்லை
இத்தனை துயர் மிகுந்ததாயும்

இந்தப் பெரு வெள்ளம் வேறொன்றுமில்லை
என் பரவசமே
என் துயர்ப்பெருக்கே

10

கடலெங்கும் தாமரை மொட்டுக்கள்
அலை மீதில் நினைவுப்பாடல்
கரையோரம் யாரோ சென்ற சுவடு
தொலைவில் அழைக்கும் குரல்
அடிவானமும் நெடுங்கடலும்
தாண்டிப் போகும் சிறுதோணி
வானேறத் தவிக்கும் துள்ளுமீன்கள்
நீர்க்குளுமையேறி
தமையவிழ்க்கத் தவிக்கும் முகிற்காடு
இரவோடும் பகலோடும் கரையும் இவ்வெளியில்தான்
அந்தக் கொலைகள் நடந்தன.

அது பழியா, பலியா, சதியா, தீர்ப்பா, நியாய மீறலா
என்று இன்னும்தான் வரலாற்றுக்குத் தெரியவில்லை.

(மைக்கலுக்கும் விசுவானந்ததேவனுக்கும்) ●

**கருணாகரன்** <poompoom2007@gmail.com>

# சாம்பலும் புழுதியும்

அந்தக் காவல்துறை வாகனம் வேகமெடுத்து புழுதியைக் கிளப்பிச் சென்றது. தன் பக்கமிருந்த கோப்பை திரும்பத் திரும்ப புரட்டிக் கொண்டிருந்தார் அந்த அதிகாரி.

அந்தக் கோப்பில் ஒரு இளம் பெண்ணின் நாலைந்து படங்களும் சாதகக் குறிப்புகளும் இருந்தன.

" இங்க வரணும்ன்னு சொல்லிட்டே இருந்தீங்க."

"வாய்ப்பே அமையலே பாரு. இன்னிக்கு இதுக்குன்னு வரவேண்டியதாப் போச்சு."

அப்புகைப்படங்கள் காவல்துறை அதிகாரியின் மகளின் படங்கள். அவளுக்கு வயது ஏறிக் கொண்டிருந்தது. சரியான வரன் அமையவில்லை. தேடிக் கொண்டிருந்தவருக்கு சாதகத்தை மீறி பரிகாரம், தோசம் கழிப்பு என்றெல்லாம் யோசிப்பு வந்து, அதையும் செய்து பார்த்திருந்தார். அப்பகுதிக்கு சமீபமாய் மாற்றலாகி வந்திருந்தார். மகளின் சாதகத்தோடு அங்கு வரவேண்டும் என்று இருமாதங்களாய் நினைத்திருந்தார்.

புழுதி பட்டு சாலையோரத்து மரங்கள் நிறத்தை மாற்றிக் கொண்டிருந்தன. வானத்து நீலம் அதன் நிறத்தை மாற்றாமல் காட்டிக் கொண்டிருந்தது.

சாம்பல் பூத்து அந்த அறையின் நிறமே மாறிப் போயிருந்தது. எரிந்து மிச்சமிருக்கும் சாம்பல் பக்திமானின் நெற்றியில் பூசப்பட்ட அடர்த்தியான திருநீறுபோல் படர்ந்திருந்தது. புத்தகங்களும் பத்திரிகைகளும் எரிந்து சாம்பலை இன்னும் அடர்த்தியாக்கியிருந்தது. வலது பக்க மூலையில் கரிக்குச்சிகளாய் தென்பட்டவை சாம்பல் மூட்டத்தை மீறிக்கொண்டு துருத்திக் கொண்டிருந்தன. மர நாற்காலிகள் ஏகதேசம் எரிந்து நிலைகுலைந்த கரிக் கட்டைகளைப் போல் சிதைந்திருந்தன. பிளாஸ்டிக் நாற்காலி ஒன்று கூழ் போல் சிதைந்து தரையில் அப்பியிருந்தது.



காவல்துறை அதிகாரி கையிலிருந்த குச்சியால் உருகிப் போயிருந்த பிளாஸ்டிக் நாற்காலியைத் தொட்டார். வாயிலிருந்து துப்பப்பட்ட 'பபிளிகாம்' போல குச்சியின் முனையில் கொஞ்சம் பிசிறு ஒட்டிக் கொண்டிருந்தது. குச்சியைத் தூக்க குழந்தையின் வாயிலிருந்து ஒழுகும் ஜொள்ளு நீர்போல பிளாஸ்டிக் துணுக்கு சற்றே நீண்டது.

"என்னடா பெட்ரோல் ஊத்தி எரிச்சுப் புட்டாங்களா? என்ன இவ்வளவு தூரம் செரியா எரிஞ்சிருக்காதே."

"இருக்கலாம் சார். எல்லாம் திட்டமிட்டு பண்ணுனதுதானே. எரிக்கறதுக்குன்னு தீர்மானிச்சு நெனச்சப்புறம் பெட்ரோலோடயே வந்திருப்பாங்க."

"ஆமா இந்த காலத்துல கெரோசின் என்க கிடைக்குது... பெட்ரோல் கிடைக்கறது சர்வ சாதாரனமாயிடுச்சு... வாங்கி ஊத்தி பத்த வெச்சிடறாங்க. நின்னு நிதானமா எரிஞ்சு எல்லா சாம்பலாயிருது."

"ஆமா எல்லோருமே ஜோதிக்குள்ளே ஐக்கிய மாயிட்டாருங்க. அதுவும் மகா ஜோதியா, குன்றத்து நெருப்பாங்கறதுதான் வித்தியாசம்."

பேண்ட் பாக்கெட்டிலிருந்து எடுத்த கைக் குட்டையை இரண்டாய் மடித்து முகத்தின் கீழ்ப் பகுதியில் மூக்கைச் சுற்றிக் கட்டிக்கொண்டார். கையிலிருந்த குச்சியால் கிளற சாம்பலும் காகிதத் துண்டுகளும் சற்றே பரவின.

"எல்லாருமே சாதி ஜோதியிலே ஐக்கியமா யிடறாங்க. அதுதான் பெரிய பிரச்சினை. சாதி அடையாளம் தெரியாம இருக்கற வரைக்கும் மனுசனா இருக்காங்க. அப்புறமெல்லா மிருகந்தா. தாகத்தை தீர்க்கறதுக்கு ரத்தம் தேவைப்படுது."

"காதலிக்கற ரண்டு பேரும் பொழங்கற ஜாதி தானே?"

"ஆமா பொழங்கற ஜாதிதான். இருந்தாலும் வேண்டாத ஜாதிகள்."

"பையன் கவர்ன்மென்ட் சர்வேன்ட்டாமே?"

"ஆமா சார். சென்டரல் கவர்ண் மென்ட் சர்வென்ட். ஜாதி திமிரை மீறிட்டு கவர்மென்ட் ஸ்டாப்புன்னு கொஞ்சம் ஆடியிருக்கான். பத்த வச்சுட்டாங்க."

"நல்ல வெளை பக்கத்துல எங்கேயும் பரவலெ. வீட்லேயும் யாரும் இல்லை."

"என்னமோ வேண்டுதல்னு சொல்லீட்டு திருச்செந்தூருக்கு போயிருக்காங்க. ஆளில்லேன்னு தெரிஞ்சுதான் பத்த வெச்சிருக்காங்க."

"பத்த வைக்கறதுக்கு ஏதோ ஒரு காரணம் தேவையாயிருந்திருக்கு. இந்த லவ் மேட்டரை புடிச்சிட்டாங்க."

அந்த காவல்துறை ஆய்வாளர் வாசலுக்கு

வந்தபோது காலில் தட்டிய அந்த படத்தை திருப்பிப் போட்டு பார்த்தார். படத்தின் பக்கமுனைகள் சிதைக்கப்பட்டு திருவள்ளுவரின் உருவம் சிதைந்திருந்தது. பக்கவாத வியாதியால் வாய் கோணிக் கொண்டுள்ளது போல திருவள்ளுவரின் தாடி சிதைந்து இடதுபக்கம் நகர்ந்திருந்தது. அவரது நெற்றியில் சமீபத்திய சரஸ்வதி பூஜையில் போட்ட திருநீற்றுக்கீற்றுகள் மிச்சமிருந்தன. திருவள்ளுவர் வழக்கமாய் நிற்கும் கோலத்தில் இல்லாமல் அந்தப் படத்தில் உட்கார்ந்திருந்தார். எதிரில் இருப்பதை தீர்க்கமாய் பார்ப்பதைப் போல முழங்கால்கள் சற்றே உயர்ந்தபடி அமர்ந்திருந்தார். அவரின் பார்வையில் ஏதோ கலக்கம் வந்துவிட்டதுபோல் இருந்தது.

"என்ன இந்த வூட்டுக்காரர் இந்த ஜாதிக்காரரை?"

"இல்ல சார் வேற ஜாதிதான். ஆனா திருவள்ளுவர் எல்லோருக்கும் பொதுவான ஆள்தானே. அதனாலே எல்லோரும் அவர் படம் வெச்சிருக்க வாய்ப்பிருக்கு. அவர எங்களோட ஜாதின்னு அடையாளம் கண்டு சொந்தம் கொண்டாட அதுக்குன்னு ஒரு ஜாதி இங்க இருக்கு."

காவல்துறை வாகனம் பட்டத்தரசியம்மன், நல்லபத்தான் கோவில்களை தாண்டி புழுதியைக் கிளப்பியபடி நகர்ந்து கொண்டிருந்தது. அழகு நாச்சியம்மன் கோவிலில் கோபுர பொம்மைகளின் வர்ணம் வெயிலில் மின்னியது. முக்கோணத்தை நிலைநிறுத்தி பொம்மைகளை மாட்டி விட்டதைப் போல் கோபுரம் நின்றிருந்தது. வாகனத்தின் பரபரப்பு வேகத்தோடு பலர் அதைத் தவிர்ப்பதற்காக மாயாமாய் மறைந்து கொண்டிருந்தார்கள். பள்ளிவாசல் தெருவில் வாகனம் நுழைந்த போது கருப்பு பர்தாவுக்குள் இருந்த நாலைந்துப் பெண்கள் முதுகை காட்டியபடி சுவர் பக்கம் திரும்பினர்.

"என்ன கேஸ் பைல் பண்ண வேண்டியிருக்குமா... இல்ல சமாதானமா போயிருவாங்களா?"

"பேசிப் பார்க்கலாம். சார் பொழங்கற சாதிங்கற தனால இது ஒன்னும் பெரிய பிரச்சனை ஆயிடாது. பொது மடத்துல உக்காந்து அவங்களையே பேசித் தீர்க்கச் சொல்லவேண்டியதுதா."

"அவர் வேற சென்ட்ரல் கவர்மென்ட் ஸ்டாப்புங் கறெ. அவரோட தொழிற்சங்கம் அரசியல் இதெல்லாம் வச்சுகிட்டு அவன் ஏதாவது கௌப்பப் போறான்."

காவல்துறை வாகனம் மறுபடியும் சிதைந்து கிடந்த பொருட்களை ஒட்டியபடி வாசலில் வந்து நின்றது. அழுத்தமான அதன் டயர்கள் எழுப்பிய புழுதி சிதைந்து கிடந்த பொருட்களின் மேல் படர்ந்தது. கொழல்மல்லி செடியொன்று சட்டென ஆடி அசைந்து நின்றது. அதனருகில் இருந்த 'மணிப்பிளான்ட்' செடியொன்று வானத்தை எட்டுவதற்கு கிளம்புவதுபோல் படர்ந்திருந்தது. சிமெண்ட் தொட்டி கவிழ்ந்து அதிலிருந்த தண்ணீர் வெளியேறி நிலத்தை சற்றே ஈரப்படுத்தியிருந்தது. தூரத்தில் காக்கைகளின் சத்தம் ஏதோ அபாயக் குரல்கள் போல பீறிட்டுக் கொண்டிருந்தது. முருக நதிக்கு செல்லும் பாதையின் வலது பக்கம் சீமெக்கருவேல முற்களால் அடர்த்தி ஆக்கப் பட்டிருந்தது. தடித்த வேப்பமரத்தின் கிளைகள் அசைந்து கொஞ்சம் காற்றை விசிறிக் கொண்டிருந்தது. ஒருவித உருமலுடன் அலைந்து கொண்டிருந்த பன்றியொன்று காவல்துறை வாகனத்தின் வலது பக்கத்தில் ஒரு விதக் கிறிச்சிடலுடன் ஓடியது.

"இங்கே வேற யாராவது ஆளுங்களே விசாரிக்க வேண்டியிருக்குமா."

"தேவையிருந்தா பாத்துக்கலாம் சார்... புகார்னு வந்தா பாக்கலாம் இல்லேன்னா வுட்டர்லாம். ஆனாலும் கண்காணிப்புக்குள்ளே இருக்கறது நல்லதுதான்."

"இந்த ஊர்ல ஜோசியம் பார்க்கறவங்க இன்னும் எவ்வளவு குடும்பம் இருப்பாங்க "

"பத்து குடும்பம் இருக்கலாம் சார். நூத்துக் கணக்கான குடும்பம் இருந்த ஊர்தான். எல்லோரும் பொழைப்பைத் தேடி வெவேறு ஊருக்குப் போயிட் டாங்க. அதுல காசு பண்றவங்களும் இருக்காங்க."

"ஜோஸ்யக்காரனுக்கும் சாமியாருக்கும் எந்த காலத்திலும் மவுசுக் குறையாதே. அவனுகளேத் தேடி நாமளும் வர வேண்டியிருக்குதே."

பனி மெல்லியத் திரையாய் ஆகாயத்தைத் தொட்டிருந்தது. சிவப்பு அரளிச் செடிகள் மெல்ல அசைந்து ஈரத்தை கொண்டிருந்தது. சிமெண்ட் தொட்டியில் இருந்த கருந்துளசி இன்னும் அடர்த்தியான பச்சையாய் இருந்தது.

வேல் அரை ஜான் உயரத்திற்கு ஒன்றாய் நிறுத்தி வைத்தது மாதிரி அந்த வீட்டின் கேட் திடமாய் நின்றிருந்தது. அதன் அருகில் உட்கார நான்கைந்து பிளாஸ்டிக் நாற்காலிகள் தாறுமாறாய் கிடந்தன. ஒரு சிமெண்ட் பென்ச் ஒன்று நீளவாக்கில் கேட்பாரற்று கிடந்தது. கேட்டின் மேல்ப் பகுதி கூரையிலிருந்து பச்சை கற்றாளை ஒன்று கொசுவை விரட்டுகிறேன் பார் என்கிற ரீதியில் தொங்கிக் கொண்டிருந்தது. இரண்டு சக்கர வாகனங்கள் முயன்று ஒரு கூரையின்கீழ் இறந்து கிடந்தது போல் நின்றிருந்தன. அவற்றின் பக்கத்தில் படுத்திருந்த நாயொன்று தலையைத் தூக்கி பார்த்த பின் மீண்டும் தூங்க ஆரம்பித்தது. பனித்திரையினூடே பலர் நடமாடிக் கொண்டிருந்தார்கள். வீட்டு முகப்பில் சலவைக் கல்லில் பொருத்தியிருந்த இரண்டு விநாயகர்கள் வெவ்வேறு திசையினைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

'சுந்தரவேல் கணித வித்வான் மனை' என்ற எழுத்துக்கள் சலவைக் கல்லில் மிளிர்ந்தன. கணேச குமாரன் (எ) கணபதி - கணித ஜோதிடர் என்ற பெயருக்கு கீழ் ஜாதகங்கள் பார்க்கப்படும் என்ற பிளக்ஸ் போர்டு தொங்கியிருந்தது.

"சோமு என்னடாப் பண்றே? வெளியே நாலு பேரு தெரியறாங்க. பாலில்லாட்டியும் போச்சேது கறுப்பு டீ போட்டுக் குடு."



"வீட்டு பாடம் எழுதீட்டு இருக்கேம்பா..."

"என்னடாப் பெரிய படிப்பு.... எலிமென்டரி ஸ்கூல் படிப்புக்கு...?"

"இருக்கட்டும்பா வீட்டுப் பாடம் குடுத்திருக்காங்க... நீங்க வேற கவர்ன்மென்ட் ஸ்கூல்லே சேத்திட்டு கஷ்டப்படுத்தறீங்க."

"கவர்ன்மென்ட் ஸ்கூலும் நல்ல ஸ்கூல்தாண்டா... நாங்களெல்லாம் அதிலேதான் படிச்சு அறிவாளி யானோம். என்ன கொறச்சல், இங்கிலிஷ் மீடியத்துக்கு பத்து மைல் போகணுமே."

சோமசுந்தரம் கைகளிலிருந்து நோட்டைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு வகையான தூக்கக் கலக்கத்தில் அவன் கையிலிருந்த புத்தகம் நழுவதை போல் இருந்தது. இடது கையிலிருந்து வலது கைக்குப் புத்தகத்தை மாற்றிக்கொண்டான்.

"நீயே அம்மாகிட்டே சொல்லீருப்பா... பால் காப்பி வேணுமா சுக்கு காப்பி வேணுமா துளசி காப்பி வேணுமா என்ன வேணும்னு நீயே அம்மாகிட்டே சொல்லிடு."

கணபதி முன் வாசலுக்கு வந்த போது அவரை நோக்கி வந்த இருவர் லேசான குளிரை தாக்கு பிடிக்கும் விதமாக கைகளை கட்டியிருந்தனர். அவர்களின் உடம்பு குளிரால் சிறுத்திருந்தது.குளிரில் விரைத்திருந்த உடம்புகள் போலிருந்தன.

"ராத்திரி அப்புறம் எப்படி தூங்கனீங்க."

"இங்கதா பெஞ்சுமேல படுத்துட்டோ "

"குளிரா இருந்துருக்குமில்லே."

"ஆமா கொஞ்சம் இருந்துதுச்சு.. சாமாளிச் சுட்டோம் ..."

"திருப்பூர் பக்கம் இருந்து நாலு ஜாதகம் வந்தாங்க. பாத்து லேட்டாயிடுச்சு எல்லாரும் வேவாரிங்க. காசு பண்றவங்க. காசு பன்றதற்கு ஆயிரத்தெட்டு வழியை தேடறவங்க... அவங்கள முடிச்சிட்டு உங்களெ கூப்புடலாம்னு இருந்தென்... அதுக்குள்ளே ஒரு பஞ் சாயத்து வேற வந்துடுச்சு."

"அப்படியென்னங்க ராத்திரியிலெ பஞ்சாயத்து."

"எங்காளுககுள்ளேதான் பிரச்சினை ஜாதகம் பாக்கறோம். காசு வருது ஒழுங்கா இருந்துக்க வேண்டியதுதானே. இதுல வேற தோஷம்னு வந்துட்டா பரிகாரம்னு சில பேரு இப்ப ஆரம்பிச்சுட்டாங்க."

"தோஷம்னு இருந்தா பரிகாரம்னு தேவைதானே."

"பண்ணலாம் ஆனா அதெல்லாம் பண்றது வேற ஜாதிக்காரன் தா பண்ணனும். ஜாதகம் பார்த்துட்டு நாங்களே பண்ணகூடாது. தலமுறை தலமுறையா ஐதீகம் இருக்கு. அத மீறிட்டு காசு வாங்க ஆரம்பிச்சுட்டாங்க."

"அப்படி பண்ணக்கூடாதுங்களா... எங்க ஊர்ல எல்லாம் பன்றாங்களே."

"பண்றதெல்லாம் நல்லதுல்லே. பாவம் வந்து சேரும். பிரம்மனுக்கு உரிய எடத்துலெ உக்கார்ந்துட்டு. எங்களுக்கு வேலை, இதுதான் உன் தலையிலே எழுதியிருக்குன்னு சொல்லுறது... அந்த மாதிரி சுலபமான வேலை... இத வுட்டுட்டு பரிகாரம்னு எச்சக்கலையா கெளம்பறது நல்லால்லே."

"கொஞ்சம் வருமான ஆசை வந்ததாலே பண்ணியிருப்பாங்க."

"வருமானத்துக்குன்னு ஆசைப்படறது தொழிலையே கேவலமாக்கீரும். அதெல்லாம். ஆகாதுங்க"

நாற்காலியில் உட்கார்ந்து கொண்ட அவர்கள் கணபதியை உற்றுநோக்கிக் கொண்டிருந்தார்கள். கணபதி போர்த்தியிருந்த சால்வையை விலக்கியபோது அவர் உடம்பின் மீதிருந்த கனத்த ஸ்வெட்டர் தெரிந்தது. மிதமான குளிரை சுலபமாக எதிர்கொள்வதைப் போல உட்கார்ந்திருந்தார்.

"ஆமா நீங்க எந்த ஊர் காரங்க..."

"வடக்கால கோபிக்கு அந்தப் பக்கம் நம்பியூர்ங்க. ரண்டு ஜாதகம் பாக்கணும். கல்யாண விசேஷம். எங்க ஊர்லேயே இப்போ தடுக்கி விழுந்தா ஜோஸ்யக் காரங்க இருக்காங்க. ஆனா இங்க வந்து போறதுதான் நம்பிக்கையும் திருப்தியும் இருக்கு. அதுதான் லேட்டாயிடுச்சுன்னு இங்கியே இருந்துட்டோம், அவ்வளவு தூரம் திரும்பி போக முடியாதுன்னு. உங்க வாயிலே சொல்றது ஏதாயிருந்தாலும் மந்திரமா இருக்கும்னு நம்பிக்கை."

"சரிங்க அரை மணி நேரத்துலெ ரெடியாயிடறேன். ஒரு குளியல் போட்டுட்டு கணபதிக்கு பத்து தோப்புக்கரணம் வேலையெ ஆரம்பிச்சுடலாம்."

"அப்பா நாங்களும் டீக்கடைப் பக்கம் போயிட்டு வந்துடறோம்."

"சரிங்க. டேய் சோமு ரத்னவேல் வந்திருக்கா பாரு... என்னடா ரத்னவேலு."

ரத்னவேலு உடம்பை குறுக்கிக்கொண்டு நின்றிருந்தான். அவனின் கிழிந்த சட்டை காலர் பகுதி விகாரமாய் பற்களைக் காட்டிச் சிரிக்கும் மனநோயாளி போல இருந்தது. அவன் கைகளை இன்னும் இறுக்கிக் கொண்டான்.

"கணக்குப் புத்தகம் வாங்கணும்னு வந்தேங்க."

"சரி வாங்கீட்டு போ... நீங்க படிக்கற இந்த ஏலுமென்டரி ஸ்கூல் படிப்புக்கு காலிலேயே கௌம்பிட்டீங்களா. சரி படிங்க படிங்க... இந்த குளிருக்கு ஒரு துண்டையாவது தலையிலே கட்டீட்டு வர்னுமில்லெ."

சற்று தூரத்தில் தெரிந்த உருவங்கள் பனியோடு மங்கலாகியிருந்தன. சோற்றுக்கஞ்சியை இறைத்து விட்ட மாதிரி இருந்தது பனியின் சீறல்.

நம்பியூர்காரருக்கு கணபதியின் மேல் பெரும் நம்பிக்கை இருந்தது. சாவக்காட்டுப்பாளையத்தில் அவரின் சித்தப்பா மகனுக்கு சாதகம் சொல்லும் விசயங்கள் எதுவும் நடக்காமல் தாறுமாறாகவே எல்லாம் சென்று கொண்டிருந்தபோது அவரை சந்தித்தார். "அது ஒண்ணும் இல்லே. ஜாதகம் எழுதும் போது லக்கனம் கொஞ்சம் மாத்தியிருந்தாலும் இப்படியாகும். அவன் பொறந்ததிலிருந்து நடந்ததையெல்லா சொல்லிருங்க" என்று கேட்டு முக்கிய விசயங்களைப் பட்டியலிட்டுக் கொண்டார். பிறகு, சாதகத்தை எடுத்து வைத்துக்கொண்டு கட்டங்களை ஆராய்ந்து லக்கனம் ஒன்று சற்றே மாற்றி பதிவாகியிருப்பதை கணித்து மறு சாதகம் எழுதினார்.

அதன்படி இதுவரை நடந்ததையெல்லாம் உறுதிப்படுத்திக் கொண்டு அப்படி எழுதினார். அதன் பின் அவர் கணித்தவையும் முறையாக இருந்தன என்பதே அவரை திரும்பத்திரும்ப பழையனூருக்கு கணபதியிடம் வரச் செய்திருக்கிறது.

அப்படித்தான் அந்தக் காவல்துறை அதிகாரியும் பழையனூருக்கு வர வேண்டியிருந்தது.

அவரை இறக்கிவிட்டு காவல்துறை வாகனம் புழுதியைக்கிளப்பியபடிச் சென்றது. பனியை மீறி புழுதி கிளம்பியது. பனி அந்தப்புழுதியை அடக்க முடியாமல் போய்விட்டதை ஆச்சர்யத்துடன் பார்ப்பது போல் பார்த்தார். காவல்துறை வாகனம் பார்த்து கணபதி எப்போதும் பயப்பட்டதில்லை. காவல்துறை அலுவலகங்களில் கதவு, சன்னல் மாட்ட நல்ல நாள்., வாஸ்து பற்றிய தகவல்களுக்காக எப்போதும் வந்து செல்வர்.




மகளின் சாதகக் கோப்பை கையில் எடுத்த காவல்துறை அதிகாரி அதை ஒரு தரம் பார்த்துவிட்டு உட்கார்ந்திருந்த வாகன இருக்கையின் மேல் போட்டார். இந்த முறை தீயில் எரிந்து போன அந்த வீட்டின் சாதகம், விபரங்களை கணபதியிடம் ஆரம்பிக்கலாமா என்ற எண்ணம் அவருக்கு வந்தது.

சாதகத்தில் இருக்கும் பல கட்டங்கள் ஞாபகம் வந்தன. எந்தக் கட்டதிலிருந்து, எந்த லக்கனத்திலிருந்து ஆரம்பிப்பது இந்த விசாரணையை என்று யோசிக்க ஆரம்பித்தார்.

வீட்டு முகப்பைத் தாண்டிச் சென்றவருக்கு மங்கலான வள்ளுவர் படம் புறக்கணிக்கப்பட்டதாய் வலது பக்கச் சுவரின் மூலையில் இருந்தது கண்ணிபட்டது. ●

**சுப்ரபாரதிமணியன்** <subrabharathi@gmail.com>



Published by Prabhu Thilaak, No. 5 - 5th Street, Somasundaram Avenue, Shakthi Nagar, Porur, Chennai - 600 116;
Printed by A. Chandran on behalf of AMRUDHA, Ayyanar Offset, No. 10 Subbarao Nagar, Choolaimedu, Chennai - 600 094;
Owner and Editor: Prabhu Thilaak



# அம்ருதா அட்சரா பதிப்பக

## வெளியீடுகள் கிடைக்குமிடம்

| | | |
|---|---|---|
| **நியூ புக் லேண்ட்ஸ்**<br>வடக்கு உஸ்மான் ரோடு,<br>தி. நகர், சென்னை 600 017.<br>தொலைபேசி : 044 - 2815 6006 | **ரம்யா புக் சென்டர்**<br>எண். 160, தலைமைத் தபால்<br>அலுவலகம், விழுப்புரம்.<br>கைபேசி : 94431 78985 | **A.K. சந்திரப்பன் & சன்ஸ்**<br>எண். 252/181, செரி ரோடு,<br>சேலம்.<br>தொலைபேசி : 0427 2410096 |
| **திருமால் புக் ஷாப்**<br>எண்.17/A, பெங்களூர் சாலை,<br>கிருஷ்ணகிரி.<br>கைபேசி : 94436 31041 | **விஜயா பதிப்பகம்**<br>எண். 20, ராஜா தெரு,<br>கோவை - 641 001.<br>கைபேசி : 94436 50000<br>தொலைபேசி : 2394614 | **புக்ஸ் & புக்ஸ்**<br>எண். 28, நியூ ஸ்கீம் சாலை,<br>பொள்ளாச்சி - 624 001.<br>கைபேசி : 98650 05084 |
| **அருணை புக் சென்டர்**<br>திருவூடல் தெரு,<br>திருவண்ணாமலை - 606 601.<br>கைபேசி : 92453 32385 | **நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**<br>எண்.79-80, மேற்கு வெளி வீதி,<br>மதுரை - 625 001.<br>தொலைபேசி : 0452-2344106 | **சர்வோதயா இலக்கியப் பண்ணை**<br>எண்.32/1, மேற்கு வெளி வீதி,<br>மதுரை-1.<br>கைபேசி : 98848 42007 |
| **குமுதம் புக் சென்டர்**<br>எண். 20, VOC பஸ் நிலையம்,<br>பழனி.<br>கைபேசி : 98428 43479 | **மக்கள்மணி புத்தக நிலையம்**<br>எண். 28, காமராஜர் காம்ப்ளக்ஸ்,<br>[illegible]<br>[illegible], திருப்பூர்.<br>கைபேசி : 94420 04254 | **பாண்டியன் புத்தக அகம்**<br>எண். 733, வடக்கு மெயின் தெரு,<br>பிருந்தாவனம் அருகில்,<br>புதுக்கோட்டை - 622 001<br>கைபேசி : 99786 93072 |
| **பாவேந்தர் புக் ஸ்டால்**<br>எண். 1, கலைஞர் நகர்,<br>நகராட்சி காலனி,<br>மருத்துவக் கல்லூரி சாலை,<br>தஞ்சாவூர்.<br>கைபேசி : 93600 18384 | **மார்க்கண்டேயன் புக் காலனி**<br>கும்பேஸ்வரர் சன்னதி,<br>கும்பகோணம் - 612 001.<br>கைபேசி : 96298 15580 | **இளங்கோ புக் சென்டர்**<br>எண். 515, நாராயண பிள்ளை தெரு,<br>மயிலாடுதுறை<br>தொலைபேசி : 04364-226188 |
| **அறிவு புத்தக நிலையம்**<br>தெற்குத் தெரு, திருவாரூர்.<br>கைபேசி : 94431 23561 | **பாலா தினகரன் நியூஸ் ஏஜென்சி**<br>காரைக்கால்.<br>கைபேசி : 94431 20637 | **நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**<br>எண். 4, பெரியார் மஹால்<br>பஸ் நிலையம், திருநெல்வேலி.<br>கைபேசி : 98948 66890 |
| **கவின் புக் சென்டர்**<br>எண். 1/25, சிதம்பரம் மெயின் ரோடு,<br>பாளையங்கோட்டை ரோடு, தூத்துக்குடி<br>கைபேசி : 94436 33333 | **சித்ரா தேவி கஸ்தூரி புக் சென்டர்**<br>எண். 280, மெயின் ரோடு,<br>கோவில்பட்டி - 628 501.<br>கைபேசி : 98943 25574 | **சுதர்சன் புக்ஸ்**<br>எண். 4, பெல் கட்டிட டவர்,<br>S.P. அலுவலக சாலை,<br>நாகர்கோவில் - 629 001.<br>தொலைபேசி : 04652-228445 |

**தொடர்புக்கு : 044-2435 3555 / 94440 70000**

அம்ருதா இதழ் தங்கள் பகுதியில் எங்கு கிடைக்கவில்லை என்பதை
தகவல் தெரிவித்து உதவுங்கள் : 96000 79149 / 97510 01526